# வாழ்க்கைப் புயல்

(நவீனம்)

"சுகி"



புதுமைப் பிரசுரம்

பெண்ணாடம் * தெ. ஆ. ஜில்லா.

# இலக்கியத்தில் நேர்மை

முன்னுரை ?

எனது திறமையை வெளிப்படுத்துவது முன்னுரை எனது கதாபாத்திரங்களின் திறமையை வெளிப்படுத்துவது புத்தகம். எப்போதும் எனக்கு என் திறமை - முன்னுரையில் நம்பிக்கையில்லை. முன்னுரையை விடப் புத்தகம் முக்கியம். இது எனது அனுபவம்; உங்கள் அபிப்பிராயமும் கூட.

இன்று இலக்கியத்தைவிட அரசியலுக்குப் பிரதான்யம்,- அதாவது மாறுவதும் அழிவதுமான பொருள்களே மக்கள் மனதைச் சுலபமாகக் கவருகிறது. சிருஷ்டிப் பொருள்மீது ஏனோ வெறுப்பு வளர்ந்துவிட்டது. பொருளாதாரப் பிசாசிடம் மக்கள் பிடிபட்டு, அதன் இரும்புப் பிடியிலிருந்து விடுபட முடியாமல் தவிக்கும் காலம் இது.

இந்த நாளிலும் இலக்கிய சேவைக்காகப் பிரசுரங்கள் வெளிவருகின்றன. வாழ்க்கையிலுள்ள கசப்புணர்ச்சிகளை மறக்கப் 'போதை'ப் பொருளாக வாழ்க்கையின் இலக்கியங்களை நம்மில் பலர் அண்டி ரசிக்கிறோம். ஒழுங்கும் நேர்மையும் ரஸங் குன்றாது கதையின் எல்லைக்குள் சுற்றிவந்தால் உயர்ந்த பண்பை அடைகிறது. சற்று ரஸபேதம் குறைந்தாலும், ஆபாசத்துள் ஐக்கியமாகிவிடுகிறது. இன்றைய மலிவு பிரசுரங்களில் ஒருசில எதை விளங்குகின்றன என்பது நமக்குத் தெரியும். இந்த நாவலும் குறைந்த விலையுள்ள நாவல்; ஆகவே இந்த வரிகள் எழுத நேரிட்டது.

தத்துவதரிசிகள் போல, வாழ்வின் அழகைக் கண்டு சிரிக்காமலும், அதன் கோரத்தைக் கண்டு அழாமலும், ராஜீய நிபுணர்களைப் போல விஷயங்களை மூடிமெழுகாமலும், வாழ்வையும், தாழ்வையும் தராசிலிட்டுக் காட்டும் என் சகோதர ஆசிரியர்கள் முயற்சியைத் தமிழகம் ஏற்றுக்கொண்டு, இலக்கிய விளை நிலத்தின் புதிய நாற்றங்காலை நாவல்களால் வளப்படுத்துவது போன்று, என் முயற்சியையும் விதைத்துள்ளேன்.

இந்த முயற்சிக்கு ஆதரவு தந்த புதுமைப் பிரசுரம் நிர்வாகிகள் திரு. வீ. இராமசுவாமி, திரு. தாஸ் ஆகிய இருவருக்கும் எனது நன்றி.

திருச்சி,
10–12–51.

வணக்கம்
"சா "

# இன்பத்திலும் துன்பத்திலும்.

*பகலை இரவு தழுவும் மனோகரமான மாலை நேரம். அமைதி நிலவ பரந்துகிடக்கும் நீர்நிலை. அதில் அழகு மிளிர அமைத்த படகு. அதிலே ஆரணங்கு ஒருத்தியும், ஆணழகன் ஒருவனும் உல்லாச பவனி வருகிறார்கள். அக்காட்சி கவிஞனது கவிதைக்கு வித்தாக அமையும்; நிறம் மிளிரும் ஓவியத்தை ஓவியனுக்கு அளிக்கும். ஆனால் அங்கு புயல் வீசி கோரவிளைவுகள் விளையுமாயின்...... அக்காட்சிகள் சோகம் நிறைந்த ஒன்றாகிவிடும்.*

*கலைஞர்கள் இன்ப துன்பம் இரண்டையுமே தங்களது சிருஷ்டிகளில் வடித்து மக்களுக்கு வழங்கக் கடமைப்பட்டவர்கள். தங்களது எல்லா சிருஷ்டி களுக்கும் வெறியூட்டும் இன்பத்தின் சாயத்தை மட்டும் பூசாமல், இரண்டையும் சமவிகிதத்தில் வழங்குபவர்களே உண்மைக் கலைஞர்கள்.*

*அந்த வகையில் கலைஞர்* **'சுகி'** *அவர்கள், இந்த 'வாழ்க்கைப் புயல்' நவீனத்தில் இருவித சுவைகளையும் ஒருசேர வடித்துத் தந்திருக்கிறார்கள். தமிழ் மக்களாகிய உங்கட்கு, இதனை அளிப்பதில் நாங்கள் பெருமிதங் கொள்கிறோம்.*

*உங்கள் அன்புள்ள,*
*மு. வி. தாஸ்,*
**புதுமைப் பிரசுரம்.**

**24-12-'51**
**பெண்ணாடம்.**

## ஆசிரியரின் மற்ற நூல்கள்

கட்டுரைகள் :

யுத்தகால இலக்கியம்
கற்பகக் கனிகள்
சர விளக்கு
சாம்பார் சாதம்

கதைகள் :

நமஸ்காரம்
பூச்சரம்
வீடும் விளக்கும்

நாவல்கள் :

சிப்பாய் ஹிருதயம்
விதி வழியே
துணைப் பறவை
ஆசைவலை
கடற் கன்னி
காதல் கண்கள்

# வாழ்க்கைப் புயல்

அழகு சிந்தும் தாமரைக் குளத்தை அடுத்துச் செல்லும் ரஸ்தா, பேட்டைக் கிராமத்துக்குப் போகும் வழி; அந்தக் குளத்திலே, தாமரை மலர் போன்ற முகங்கள் முக்கிக் குளிப்பதையும், தாமரைத் தண்டுபோன்ற கொடியிடையார் தண்ணீர் எடுத்துப் போவதையும், பார்க்காது மேலே சென்றால் எதிரே, வாய்க்கால் குறுக்கிடும். வாய்க்காலுக்குள்ளாக கோரைப்புல்லைக் கிழித்துக்கொண்டு சலசலத்தோடும் தெள்ளிய நீர்; நீரின் ஓட்டத்தை இடையிடையே கலக்கிச் செல்லும் எருமைகளும் பசுக்களும் ஓடைக்கரைவழியே மேய்ந்து செல்வதைப் பார்க்கலாம்.

மாடுகள் நெற்பயிரில் இறங்கி விடாதபடி மாடு மேய்க்கும் சிறுவர் சிறுமியரின் குரல்கள் கேட்கும். வாய்க்கால் கரையடுத்து நிற்கும் மாமரங்களிலே கிளிகளின் இனிய கீதம், அதோடு போட்டியிடும்-மாட்டுக்கார சிறுவர்களின் தில்லானா, ஒரிருவரின் புல்லாங் குழல் எல்லாம் சேர்ந்து மேலே போக வொட்டாது கிறங்க வைக்கும். ஊருக்குப் புதிதாக இருப்பவர்களுக்குத்தான் இயற்கையின் அழகு மண்டிக் கிடப்பதும், பசிய மணங்களின் சுகந்தமும், மெல்லிய நடையில் ஆடி அசைந்து செல்லும் பாற் பசுக்களும், துள்ளித் திரியும் கன்றுகளும் பார்க்கப் பார்க்க இன்னும் பார்க்க வேண்டுமென்று தோன்றும்.

அதிலும் காலை நேரத்திலே குபீரென மலர்ந்து, வருவாரை எதிர்கொண்டழைக்கும் தாமரைப் பூக்களும், மாலையிலே அலரும் அல்லிப் புஷ்பங்களும் மறக்க முடியாத காட்சிகள். ஒன்றை மறந்து விட்டேனே; குளத்தங் கரையிலே ஓங்கி வளர்ந்த அரச மரத்தின் பளபளவென 'டால்' வீசும் இலைகள் தங்கத் தகடுகள் போலக் காலையிலும் மாலையிலும் அசைந்தாடும். காற்றிலே அசைந்து கலகலவென இன்னிசையைப் பொழிந்து கொண்டே நிற்கும் அரச மரத்தைத், தூரத்திலே செல்லும் செங்கோட்டை பாஸஞ்சரிலிருந்தபடியே பார்க்க முடியும். குளத்தையும் குளத்தை யடுத்த நீரோடையின் வனப்புகளையும் ரஸ்தாவுக்குள் வரும்போதுதான் அனுபவிக்க இயலும். ஆனால் பழகிப்போன பேட்டை.

கிராமத்து மக்களுக்குத் தத்தம் தொழில்களே குறி. நல்லெண்ணெய்க்குப் பெயர்போன அந்தக் கிராமத்துச் செக்கு மாடுகள்தாம், வயல் வரப்புகளின் இளமையையும் தாமரைக் குளத்தின் குளுமையையும் ஆற அமர அனுபவிக்கின்றவை. வாய்க்கால் கரை வழியே மேய்ந்து கொண்டிருந்த நாலைந்து கறவைப் பசுக்களையும் எருமைகளையும் ஓட்டிக்கொண்டு சந்தனக் கோனார் தாமரைக் குளம் பக்கமாக வந்தார். அவர் அவசர அவசரமாகக் கன்று மாடுகளைக் குளிப்பாட்டிக்கொண்டு புறப்படவே, மாடுகள் எழ மனம் வராமல் நீச்சலடித்துக் கொண்டிருந்தன.

"டேய் பையா, நீ வீட்டுக்குக் கொஞ்சம் பொறுத்து ஓட்டிவா" என்ற சமயம் மாட்டுக்காரப் பையன் தாமரைப் பூவிலுள்ள விதைகளை ருசித்துக் கொண்டிருந்தான். வேகமாக நடக்க ஆரம்பித்தார். சொந்த முயற்சியால்

முன்னுக்கு வந்த பால் வியாபாரிகளில் பேட்டையிலுள்ள சந்தனக் கோனாரும் ஒருவர். ஊருக்கு ஒதுக்குப்புறம்; சின்ன வீடு; பெரிய மாட்டுக் கொட்டில்; வீட்டின் பின் புறம் வைக்கோல் படப்புகள், நாலு மாடுகளில் கிடைத்த லாபத்தை, ஐந்தாவது பசுவாக மாற்ற முயற்சி செய்தார்.

பேட்டைக்குக் கிழக்கே ஐந்து மைல் மேலப்பாளையம்; திருநெல்வேலி ஜில்லாவின் மாடுகள், ஆடுகள் வந்து கைமாறும் இடம். விற்போரையும் வாங்குவோரையும் விட, தரகர்கள் கூச்சலும் கும்பலும் நிறைந்த இடம். ஒரு பசு மாட்டை வாங்கு முன், பதினாறு தரகர்கள் வம்பை விலைக்கு வாங்காமல் தற்காப்புச் செய்யத் தெரிய வேண்டும். விமர்சகர்களால் இலக்கியம் வளர்ந்தால், தரகர்களால் வியாபாரம் செழிக்கும் என்றும் கொள்ள லாம்.

இந்தத் தரகர்கள் பிடிக்குள் சிக்கும் பழக்கத்தைத் தாண்டியவர் சந்தனக் கோனார். ஜே, ஜே என்று சந்தைக் கூட்டம்; புது மாடுகளின் மணியோசை; தொம்புச் சதங் கையின் சல்லாபம்; மிளகாயின நெடி; இவைகளைத் தாண்டிப் போய்க்கொண்டிருந்தார் பேட்டைச் சந்தனக் கோனார்.

"மாடு வேணுமா?" என்று ஒரு குரல் அவர் கையைப்பிடித்துக் கொண்டது; உடும்புப் பிடியிலிருந்து விலகினாலும் மேலப்பாளையத்துத் தரகர் பிடியிலிருந்து விலகுவது முடியாத காரியம். "விடய்யா" என்று சந்தனக் கோனார் உதறிவிட்டுக், கை பிடித்தவர் முகத்தை ஏறிட் டுப்பார்த்தார். "கிருஷ்ணக் கோனாரா?" சிரித்தார். சந்தையில் மாடு பிடிக்க வந்த சந்தனக்கோனார், பால்ய

நண்பன் கிருஷ்ணக் கோனாரைக் கண்டார். இருவருக்கும் கிட்டத்தட்ட ஒரே வயசு.

"அடாடா! நாம் ஒருவரை ஒருவர் சந்தித்து எவ்வளவு நாள் ஆச்சு!"

"என்னப்பா சந்தனம் சௌக்கியமா?"

"நீ சௌக்கியமா?"

இருவரும் உபய க்ஷேமம் பரிமாறிக் கொண்டனர். பழைய நாள் ஆட்டுக்கிடை சிநேகிதம் நினைவிற்கு வந்தது. எட்டின உறவு முறை; அதனால் இருவரும் நூறு மைல் இரு நூறு மைல் ஆடுகளுக்கு மேய்ச்சல் தரை தேடிப் போன இடத்தில் நண்பர்களாக வாழ்ந்தவர்கள். மலைப் பிராந்தியங்களிலே இருவரும் ஒருவர் துணையில் மற்றவர் பயமின்றி ஆடுகளை மேய்த்தவர்கள்.

"ஒரு நாள் புலிகூட வந்ததே!" என்று கிருஷ்ணக் கோனார் சந்தனக் கோனாரைப் பிடித்துக் கொண்டார்.

"அடேயப்பா, அதை நினைச்சாலே குடல் கருகுது!"

சந்தையில் உள்ள இரைச்சலையும், தரகர்களின் கூக்குரலையும் மறந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

"நீ என்ன செய்றே?"

"ஆட்டுக்கிடை வேலைக்கு ஒரு வகையாகத் தலை முழுகிட்டேன். கால் மாரி, வாய் மாரி வந்து ஆடுகள் படு சேதமாய்ப் போச்சு."

"பிழைப்பு நடக்கணுமே?"

"பால் வியாபாரம் செய்யறேன். நீ என்னப்பா கிருஷ்ணா."

"இந்தக் கிருஷ்ணன் எங்கே இருந்தாலும் சுகந்தான்."

"என்ன செய்யறே ?"

"இப்படி, தரகு வேலை; மாட்டுத் தரகு, மனைத்தரகு; கிடைக்காத சாமான் தரகு......"

"பிளாக் மார்க்கெட் புள்ளியாகிட்டே."

அசட்டுத்தனமாகச் சிரித்துக்கொண்டார் கிருஷ்ணக் கோனார்.

"குழந்தை குட்டி உண்டா ?"

"எனக்கு ஒரு குழந்தை இருக்கிறது." என்று விளம்பரம் செய்தார் சந்தனக் கோனார்.

"அப்போ நான் வரட்டுமா ?" என்று கிருஷ்ணக் கோனார் நழுவ ஆரம்பித்தார். சந்தனக் கோனார் இலகுவில் விட்டுவிடாமல் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். தமக்கு ஒரு பசு வாங்கித் தரும்படி வேண்டினார்.

"அட என்னப்பா உனக்கோ புள்ளைக்குட்டி இல்லை. இப்போ எங்கே தாம் போறே ? வாயேம் நம்ம ஊருக்கு" என்று கெஞ்சினார் சந்தனம்.

"இப்படி நாலு சந்தை சுத்தணும்; சத்திரம் கண்ட இடம் படுக்கை; ஆறு கண்ட இடம் குளிப்பு; களப்பு கண்ட இடம் சாப்பாடு."

"இது என்ன பொழப்போ கிருஷ்ணு ?"

"கல்யாணம் கட்டி, அந்த தொல்லை நமக்கு வேண்டா மின்னு இருந்து விட்டேன்."

கிருஷ்ணக்கோனார் சுலபமாக நழுவ நினைத்தும் சிநேகிதன் பிடியை விட்டுப்போக முடியாமல் திண்டாடினார்.

வலுக்கட்டாயமாகப் பால் மாட்டோடு நண்பனையும் ஓட்டிக் கொண்டு வந்தார் சந்தனக் கோனார்.

கண்ணம்மா, பசுவைப் பார்த்துப் பார்த்து மகிழ்ச்சி கொண்டாள். இவ்வளவு மலிவான விலையில் இதுவரையில் பசு வந்ததில்லை. இரண்டாம் ஈத்து மாடு; பெட்டி மாதிரி சின்னஞ்சிறுசு; மயிலை நிறத்தில், கொள்ளை அழகோடு நல்ல குணம். அதன் நெற்றியிலே குங்குமம் இட்டால் 'சாவித்திரி மாதிரி' என்று கூடச் சொல்லலாம்! மாட்டின் அழகிலும் அது கறக்கும் கறவையிலும் மனம் உப்பிப் போனாள்.

"இப்படி மாடு நான் வாங்கவே யில்லை. எனக்கு வாங்கத் தெரியுமா, கண்ணு, என் சேக்காளி, கிருஷ்ணன் வாங்கித் தந்தான்!" என்றார் சந்தனக் கோனார்.

அதிக சிரத்தை எடுக்காமல், "அப்படியா?" என்று அலுப்போடு சொன்னாள் கண்ணம்மா.

"கேட்டியா கண்ணு, கிருஷ்ணனை இங்கேயே இருக்கச் சொல்லி, நம்மோடே கூட்டா பால் வியாபாரம் செய்யச் சொல்லலாமின்னு யோசனை. நீ என்ன நினைக்கிறே?"

அவள் எதுவும் சொல்லாமல், மாட்டுத் தொழுவத்தைச் சுத்தஞ் செய்யப் போய் விட்டாள்.

கிருஷ்ணக் கோனார் நண்பன் வீட்டில் காலெடுத்து வைத்தது முதல், அவர் மனம், மதவக்குறிச்சி கிராமத்திற்குள் வேர்ஊன்ற ஆரம்பித்தது. சில வருஷங்களுக்கு முன் கிருஷ்ணன் காளைப் பருவமாக இருந்த சமயம், தன் சித்தி வீட்டுக்குப் போயிருந்த காலம். உப்பிடாதி அம்மன் திருவிழாவிற்காக அவர் விஜயம் செய்திருந்தார்.

சித்தி வீட்டுக்கு அடுத்த வீடு கண்ணம்மா வீடு. வீடு அடுத்த வீடாக இருந்தாலும் கண்ணம்மா பேச்சு வார்த்தை குசுகுசுவென இருக்காது. படபடவென நாலு பேர் காதிலே விழும்படி பேசும் சுபாவம்; வெட்கம் கூச்சம் என்பது போலியாகக் கிடையாது. அவள் பேச வேண்டியதை யாரிடமும் பேசுவாள். சிரித்துப் பேசுவாள்; அதனால் யாரிடமும் அவளுக்குப் பயமில்லை என்பது வெளிப்படை.

கண்ணம்மாவின் குரல், கிருஷ்ணக் கோனர் காதில் ரம்மியமாக ஒலித்தது. அவளது இரண்டுங் கெட்டான் பருவச் செழிப்பு அவர் உள்ளத்திற்குச் சிந்தனை தந்தது. கள்ளங் கபடமின்றி அவரோடு விளையாட்டாகச் சிரித்துப் பேசிய விதம், அவர் செயலுக்கு ஊக்கம் தந்தது. மிரள மிரள விழிக்கும் கருந்திராக்ஷை போன்ற, கண்கள்; துள்ளியோடும் இளமறியின் நடை! கலகல வென்ற வெள்ளி மணியின் பேச்சுக் குரல்; இனிமையான பார்வை எல்லாம் சேர்ந்து மனதை எங்கோ தூக்கிச் சென்றது. அவர் உள்ளத்தை குளிரச் செய்யும் அமிர்த கவசமாக இருந்தாள் கண்ணம்மா.

வயசும் வயசும் சந்திக்க நினைக்கும் இக்கட்டான பருவ வயதுடையவர்கள். கிருஷ்ணனின் காளை உள்ளம் கொஞ்சம் மோத ஆரம்பித்தது.

எல்லோரும் உப்பிடாதி அம்மன் கோவிலுக்குப் போய்க்கொண்டும் புறப்பட்டுக் கொண்டும் இருந்தார்கள். கண்ணம்மா, தன் வீட்டிற்குப் பின் பக்கம் நின்று தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள். சோப்பு நுரை குலுங்க குலுங்க முகத்தைத் தேய்த்துத் துடைத்துக் கொண்டாள்.

படியச் சீவியிருந்த தலைக்கட்டு; ஜடையிலே ஜடைப் பில்லையும், சுற்றி முல்லைப் பூக்களும் சுடர் விட்டன. நெற்றிக்குத் திலக மிட்டாள். தன் அழகைக் காண, வலது கையால் கண்ணாடியை எட்டிப் பிடித்தும் சமீபத்தில் பிடித்தும் அழகு பார்க்தாள்.

"பேஷ்! ரொம்ப பேஷ்!" என்ற குரல் கேட்டது மற்றப் பெண்களாக இருந்தால் ஒன்று கண்ணாடியைப் போட்டுவிட்டு ஓடுவார்கள்; அல்லது கல் சிலை ஆவார்கள். கண்ணம்மா, குரல் வந்த திக்கைப் பார்த்தாள். அசட்டு களை முகத்திலே பரவிய கோலத்தில் கிருஷ்ணன் நின்று கொண்டிருந்தான்.

"எங்கே இன்னொரு முறை சொல்லு?"

கிருஷ்ணன் வெலவெலத்துப் போனான்; வியர்வைக் கடல் குமிழ் சாடுகிறது. அசட்டுத் தனம் அலைமோதுகிறது. நாக்கு, தண்ணீரை விட்டு வந்த மீன்போல வாய்க்குள்ளாகத் துடிக்கிறது. வரட்சியுற்ற இதழ் கோணங்களிலே கோலங்களிலும் அப்பாவித்தனம் குடி கொண்டது.

"என்னய்யா பிரமாதமான கேள்வி கேட்டே; இப்போ பேந்தப், பேந்த விழிக்கிறே?"

இப்படி இன்னும் அசட்டுப் பட்டம் கட்டவே கிருஷ்ணனிடம் உள்ள 'ஆண் தன்மை'தான் ஆட்கொண்டிருப்பதை நினைவூட்டிற்று. நீ ஆண்பிள்ளையடா, 'நீ ஆண் பிள்ளையா?' என்று அவன் 'அந்தராத்மா' சொல்லவே, "பேஷ் ரொம்ப பேஷ்!" என்று துணிந்து சொன்னான் ஆனாலும் முதன் முதலில் போட்ட 'பேஷ்' போல அழுத்த

யாக விழவில்லை. கொஞ்சம் இழுவலாகத்தான் சொல்ல முடிந்தது.

"என்ன பேஷ்!" என்றாள் இழுவலாக.

மீண்டும் அவனுக்குத் தர்ம சங்கடம் நேர்ந்தது. ஒரு மாதத்திற்கு முன்பாக ஆட்டுக்கிடையில் புகுந்த பெண் புலியைக் கைத்தடியாலேயே தாக்கி அதை வீழ்த்தியவன் தான். இப்போது புலியை விடக் கொடுமையாகக் கண்ணம்மா பேச்சுப் பட்டது.

கோவிலில் தீபாராதனை சமயம் என்பதைக் கட்டி மேளம் கொட்டி எங்கும் தெரிவித்துக் கொண்டிருந் தார்கள். அதனால், கண்ணாடியையும் கருஞ்சாந்துச் சிரட் டையையும் தன் வீட்டுக்குள் வைத்த கண்ணம்மா பின் வாசற் கதவைச் சாத்தி காட்டுக் குறுக்குப் பாதையாக அடுத்த வீட்டுத் தோட்டத்துக்குள் புகுந்து புறப்பட்டாள். அருகே நின்ற வேப்ப மரத்திலே அவள் பேச்சைக் கேட் டுக் கிறுகிறுத்த கிருஷ்ணன், சாய்ந்திருந்தான்.

மெல்லிய பூங்காற்று கண்ணம்மா மீது படர்ந்தது. அந்தக் குளிர்ச்சியான தோட்டம்! கண்ணம்மாவின் தலை யலங்காரம், கண்டோர் மயங்கும் கள்வெறிக் கண்கள், சொகுசு நடை, கிருஷ்ணனை மாயலோகத்திற்குத் தூக்கிச் சென்றது. தன்னை மறந்தான். செயலின் விளைவை எண்ணாது, "கண்ணு......கண்ணம்மா" என்று அவள் கையைப் பிடித்து விட்டான.

கண்ணம்மா, பெண்கள் குலத்துக்குரிய நாணத்தால் முகஞ் சிவந்து வியர்த்து விறுவிறுத்து உடல் ஒடிய கண்ணீர் சோரத் திமிறவில்லை.

"சீ! கையை விடு. தொட்டுத் தாலிகட்டியவன் மாதிரி!" என்று நிமிர்ந்து கேட்டாள். ஆசைக் கனவுகள் அஸ்திவாரம் உள்பட அழிந்ததைக் கண்டவன், பாம்புப் புற்றில் கைவைத்தவனைப் பின் வாங்கினான். உள்ளத்தைக் குளிர்வித்த கண்ணும் கரமும் உஷ்ணப் பிண்டமாக உணர்ச்சி தந்தன.

"ஆம்பிள்ளையாம் ஆம்பிள்ளை!" என்று கனல் பறக்க விழிக்கவே, "இல்லே, இல்லே கண்ணம்மா" என்று நடுங்கினான்.

அவள் "பேஷ் வெகுபேஷ்!" என்று கிண்டலாகச் சிரித்தாள். நெருப்புப் பந்தத்தை அடிவயிற்றில் சொருகிய மாதிரி இருந்தது அவளுடைய அவுட்டுச் சிரிப்பு.

"என்னய்யா நினைச்சே இந்தக் கண்ணுவை?" என்று பத்திரகாளி போல உருட்டி விழித்தாள். அவள் கண்களிலே துள்ளித் திரிந்த காந்தம், கனிவு, கனவு, எல்லாம் மறந்து ரத்தமாகச் சிவந்தது. முகத்திலே வெறுப்பும், பழிவாங்கும் தன்மையும், கடுகடுப்புடன் பரவிற்று.

"தெரியாமல்......மன்னித்துவிடு."

"இரு இரு, உன்பேரு கிருஷ்ணன்னு, இது கோகுலமா? இன்னிக்கு மரத்தோட கட்டிவைக்கச் சொல்லி முதுகுத் தோலையும் உரிச்சச் சொல்லலே, எம் பேரு மாறிப்போகும்."

அவள் நகராமல், படமெடுத்த நாகப் பாம்பு போன்று சீறுகிறாள். இவன் மகுடியாக இருக்கவேண்டியவன் மண்ணுந்தை போலப் பணிகிறான். இவன் தணியத் தணிய அவள் கோபாவேசம் அதிகமாயிற்று.

"முளிக்கிறதைப் பாரு. கல்லுளிமங்கன் மாதிரி. உங்க ஊரிலே இல்லே இந்த விளையாட்டு; இங்கே பல்லைத் தட்டி கையிலே கொடுத்திடுவாங்க! பல்லு முப்பத்திரெண்டையும்."

ஒவ்வொரு சொல்லும், பற்களைப் பிடுங்கி அவன் உள்ளங்கையில் வைக்கிற மாதிரி வந்தது. கிருஷ்ணன் பயந்துபோனான். பெண்ணுக்கு அவ்வளவு துணிச்சல் இருக்குமென்று எதிர்பார்த்தவனல்ல. சமாளித்துத் தன் அவமானம் சித்தி வீட்டாருக்கு வராமல், நழுவ யோசனை செய்தான்.

"நான் தவறு நடந்திட்டாலும்......"

கிருஷ்ணன் கோரிய மன்னிப்பைக் கேட்டுக் கண்ணம்மா விட்டுக்கொடுக்கவில்லை. அதிகார வெறியுள்ளவர்கள் இயல்பு அதுதானே; மேலே மேலே விரட்டுவது.

"உங்க ஊர்லே அப்படி நடக்கலாமய்யா; இது மதவக் குறிச்சி. கண்ணைப் பிடுங்கிப் போடுவாங்க. உங்க சித்தி வீட்டாரிடம் சொல்லி, வேண்டிய ஆக்கினை செய்யச் சொல்லுறேன்."

ராணிபோல நடந்து போய்விட்டாள் கண்ணம்மா. கிருஷ்ணன், வெளித் தோற்றத்தையும் சகஜமாகச் சிரித்துப் பேசும் இயல்பையும் கண்டு, கைநீட்டிவிட்டதற்கு வாங்கிக் கட்டிக் கொண்டதோடு, சித்தியும் சித்தப்பனும் 'கொடை' கொடுப்பார்களே என்று பயந்தான். அவனுக்குக் கோவிலுக்குப் போகவோ, கரக ஆட்டத்தைக் காணவோ, வில்லு கோஷ்டியின் கானத்தைப் பருகவோ மனம் ஓடவில்லை, எப்படியும் அங்கிருந்து ஓடவேண்டும்!

ஓடினால், தான் செய்த தவறு ஊர்ஜிதமாகிவிடுமே; இது அடுத்த கணம் கிளைத்த புதிய சிந்தனை. ஓடவும், இருக்கவும் பயந்து அடிமரத்தின்மேல் சாய்ந்தபடி நின்று விட்டான்.

அன்றிரவு அவன் எதிர்பார்த்தபடி வசவு கிடைக்க வில்லை. மறுநாள், அதற்கு மறுநாள், இரண்டு நாளும் அவன் சித்தி, சித்தப்பா இருவரையும் பயத்தோடு பார்த்தான்; பழகினன். ஆனால் அவர்கள் முன்போலவே இருந்தார்கள். தன்னைப் பயங்காட்டி ஏமாற்றிவிட்டாள் கண்ணம்மா!

நாலாம் நாள் அவன் பாலத்தில் உட்கார்ந்து பச்சரிசி மாங்காயைக் கடித்துக்கொண்டிருந்தான். உச்சி வெயில், எங்கும் நிசப்தம்; வாய்க்காலில் ஓடிய குளிர்ந்த தண்ணீரில் சிரிப்பொலி மட்டும் ஒலித்தது. ஒய்யாரமாக ஆடி அசைந்துகொண்டு கண்ணம்மா குடத்தைப் படித் துறையில் வைத்துவிட்டுத் தாவணியைத் துவைத்தாள்; பாத்திரம் விளக்கினாள்; விரால் மீனைப் போலத்தான் தண்ணீருக்குள் பாய்ந்தாள். அவிழ்ந்த தலை ரோமம் அவள் கழுத்தைச் சுற்றி மிதப்பதும், அவள் நிலை நீய்ச்சலில் ஆய்வதும், தாமரை இலைக்கு மேலாகத் தாமரை புஷ்பம் அடர்ந்திருப்பது போலக் கிருஷ்ணன் கண்ணில் பட்டது.

இதற்குமுன் அவன் மனத்திரையில் இப்படிப்பட்ட சுகமோ, ஆனந்தமோ, துக்கமோ, விவரிக்கமுடியாத உணர்ச்சிகளோ நிழலாடியதில்லை.

அவளுடைய அழகோ, நீச்சல் திறமையோ அவன் கண்களுக்குப் புலப்படவில்லை; நாலு நாட்களுக்குமுன்

தன்னை விரட்டியது, மிரட்டியது, நினைவில் அலை மோதிற்று. பெண்ணென்றும் பாராமல் அவளை வஞ்சந் தீர்க்க, அப்படியே வாய்க்காலுக்குள் அமிழ்த்திவிட நெஞ்சம் துடித்தது. பாதி கடித்திருந்த பச்சரிசி மாங்காயை, அவள் முதுகைக் குறிபார்த்து எறிந்தான். அது சொதக் என்று வந்துபட்டது.

" என்னய்யா, திமிரா ?"

அடுத்த விநாடி அவன் தண்ணீருக்குள் விரால் போலப் பாய்ந்துவிட்டான். தான் யார், தன் செய்கை என்னவென்பதை மறந்துவிட்டான். இந்த எதிர்பாராத விபத்தைக் கண்ணுற்றக் கண்ணம்மா தலையை உள்ளுக்குள் இழுத்துத் தண்ணீருக்குள் போய்விட்டாள். அவள் மூழ்கி இன்ன இடத்தில்தான் எழுந்திருக்கலாம் என்ற யூகத்தில் இவனும் தண்ணீரில் மூழ்கினான்; முக்குழித்தான்.

அவள் இவன் கையில் அகப்படவில்லை. எங்கோ போய் மூச்சுவிட்டுத் தலை நிமிர்ந்தாள். கரையோரமாக நீச்சலடித்துப் படித்துறையில் போய் நின்றதும்தான் அவளுக்கு உயிர் வந்தது. அப்போதும் அவள் பயந்து சாகவில்லை. தன் வெற்றியைக் கண்டு சிரித்துக்கொண்டாள்.

" இரு இரு. இன்னிக்கு உங்க சித்தியிடம் சொல்லி, உன்னைப் பனைமோலை விளக்குமாத்தாலே அடிக்கச் சொல்லுறேன்" என்றாள். கிருஷ்ணனுக்கு, அவளை அப்படியேப் பிடித்து அந்த வாய்க்காலுக்குள், அடி மண்ணில், செருகி விடவேண்டும் என்ற ஆத்திரம் வந்தது. ஆனல், அங்கே வந்த அவனுடைய சித்தி "ரொம்ப நல்லாயிருக்குக் கண்ணம்மா ரொம்ப அழகுதாம்"

உச்சி வெயிலிலே தனியா வந்து நீச்சல் அடிக்கிறதா நினைச்சேன். சரி சரி. நீ ஒண்ணும் சொல்ல வேண்டாம்; எனக்கே புரிஞ்சி போச்சு!" என்று சொல்லவே, தண்ணீருக்குள் தலையை முக்கிய கிருஷ்ணன் எங்கோ எழுவதற்குப் போய் விட்டான்.

பாவம். கண்ணம்மா நடந்த விபரங்களை அப்படியே சொல்லியும், வந்தவள் நம்பவில்லை!

"கிருஷ்ணன் புத்தியைக் குழப்பிவிட்டாய்; மயக்கி விட்டாய். உன்னோட வாய்க்கு இவன்தானா அகப்பட்டான்? அன்னிக்குக் கோவிலுக்கு நீ நேரங்கழித்துச் சீவிச் சிங்காரித்து வந்தே; அவனோ வரவில்லை. இப்பல்லா தெரியுது, உன்னோட மாய்மாலம். அடிக்கள்ளி! என் அக்கா மவன் தானா, உன் வாயாடித் தனத்துக்கு..........."

எதிர்பாராமல் தன் தலையிலே பழியும் பாவமும் விழுந்ததைக் கண்ணம்மா மறுத்தாள்; மருகினாள். காலாம்நாள் தன்கைப் பிடித்ததும், தான் எச்சரிக்கை விடுத்ததும் சொன்னாள்.

கிருஷ்ணன் சித்தி நம்பவில்லை.

சித்திக்கும் கண்ணம்மாவுக்கும் நடந்த வாக்குவாதங்கள் வார்த்தைக்கு வார்த்தை என்னென்பதை ஊகிக்க முடியாமற் போனாலும், அதைக் குத்துமதிப்பாகத் தெரிந்து கொண்டான் கிருஷ்ணன்.

"பார்த்தாயா உன் மேலே அபாண்டமான பழி சொல்லுகிறது, கிருஷ்ணா. இந்த ஊரிலே அது யாரையும் மதிக்கிறதே இல்லை; எல்லாருக்கும் அதைக் கண்டால் பயம். உன்னை முட்டாள் பட்டம் கட்டினால் நான் நம்புவேனா?"

கிருஷ்ணனுக்கு முதலில், தான் நல்லவன் என்று வாதாடவே ஆசை; பின்னர் பழி பாவத்தை நினைத்து "ஆமாம் சித்தி. அது கையை நான் தொட்டேன் என்னை பயமுறுத்தி விட்டது" என்று ஒப்புக்கொண்டான்.

"அடபாவி! நீயே இப்படிச் சொன்னா, ஊரு என்ன செய்யும். நம்மளைச் சுட்டுப் போடுவாங்கோ. அது மேலே ஆசைக்கொண்டு, இப்படிப் பொய் சொல்லாதே."

சித்தியின் வார்த்தை வீண் போகவில்லை. கிருஷ்ணன் தான் நிரபராதி என்றும், தன்னைக் கேலி செய்ததாகவும், கோபம் தாங்காது தண்ணீரில் அமிழ்த்தப்போக, அவள் தப்பிக் கொண்டதாகவும் சொல்லிவிட்டான்; பிறர் முன்னிலையிலும் இதே விஷயத்தை அழுத்தம் திருத்தமாகச் சொல்லவும் திட்டம் வகுத்துவிட்டான். மனப்பாடம் கூட ஆகி விட்டது.

சித்தியும் சித்தப்பாவும் கண்ணம்மா வீட்டுக்குப் போய், அவள் தாயாரை ரகசியமாகச் சந்தித்தார்கள். கண்ணம்மாள் துடுக்கு எந்த நிலையில் வந்திருக்கிறது, இதனால் விளையும் ஆபத்து என்ன என்பதை பெரிது படுத்தினார்கள். கண்ணம்மாவின் தாய், மகளுடைய அசட்டுத் துணிச்சலுக்கு அவ்வப்போது ஆத்திரங் கொள்கிறவள், இதை உண்மையென நம்பி, இனி மேலும் தன் மகளுக்கு இப்படிப்பட்ட புத்தி எழாதிருக்க, அடி அடி யென்று மாட்டை அடிப்பதுபோல அடித்தும் விட்டாள்.

"அம்மா நான் தப்பிதமே செய்யலே. செய்யலே........." என்று கதறக் கதற, "பேசினே கொண்ணு குழியை வெட்டிப் புதைச்சுப் போடுவேன். பொண்ணைப் பாரு,

பொண்ணை ஆப்பளைப் பயலொட்டம் யாருகிட்டேயும் சௌடாலா பேசறது. தான் நினைச்ச மூப்பிலே எதிரே நின்று பேசறது! இப்போ வந்தஅவமானம், நல்லவங்களா இருந்ததாலே காதுங்காதும் வைச்ச மாதிரி இவ்வளவு லேசாப் போச்சுது. நாளை உன்னை எந்தப்பயடி கட்டுவான்? இனிமே வாயைத்திறக்காதே" என்று ஒவ்வொரு வார்த் தைக்கும் எருமை மாட்டுக்குத் தண்ணீர் கலக்கும் பச்சைப் பனைமட்டையால் வெதும்ப சாத்தினுள், தாய் வெள்ளை யம்மா.

கண்ணம்மாவின் உடலில் விழுகின்ற அடியெல்லாம், கிருஷ்ணன் காதில், மேனியில், வந்து இரத்தம் கொப்பளிக் கும்படி விழுந்தது. ஓடியே போய், "அது அபலே; ஒன்றும் தவறு செய்யவில்லை." எனச் சொல்ல நினைத்தான். மறு கணம், வஞ்சம் தலைதூக்கும். தன்னை அவமானப் படுத் திய வார்த்தைகள் நினைவில் எழவே, வேண்டுமடி கண்ணு; உன்னை நல்லா வெளுக்கவேண்டும்" என்று நினைத்தான்.

அடிபட்டு இரண்டொரு தினங்கள் ஆயின. எருத் துப் பிறையில், மாடுகளுக்கு வைக்கோல் எடுத்து போட் டுக். கொண்டிருந்த சமயம் வேதனை நிறைந்த குரல் கேட்டது.

"உங்களைத்தானே." என்ருள் கண்ணம்மா.

"யாரது? கண்ணம்மாவா?"

அந்த இருள் கவியும் வேளையில், முகம் தெரிந்தும் தெரியாத ஒளியில் குரலை அடையாளம் கண்டு கொண் டான்.

"நான்தான் கண்ணம்மா" அவள் குரல் கம்மிற்று. அதிலே துன்பத்தின் உச்சம் தொனித்தது.

"என்ன ?"

"எங்கம்மா, சோறு தண்ணி இல்லாமே கோபமா படுத்திருக்கு. நீ வந்து அப்படி ஒண்ணும் வித்தியாசமா நடக்கலே; நான் தப்புச் செய்யலேன்னு சொன்ன கோடிப் புண்ணியமுண்டு அவள் கெஞ்சும் மொழியில் கேட்டாள்.

இவ்வளவு பரிதாபகரமாக, அதுவும் அந்த வேளையில் தன்னந்தனியே ஒரு வாலிபப்பெண்வந்து கெஞ்சுவாள் என்று சொப்பனத்திலும் நினைக்கவில்லை. ஆண்மனம், பெண்ணின் சோகக் குரலையும், துளும்பும் கண்ணீரையும் காணப் பொறுக்குமா? அவன் நினைவும், நெஞ்சமும் அவள் பால் சென்றது. வாக்குக் கொடுத்து, அதனால் நேரப்போகும் பலாபலன்களை எட்டி யோசிக்கும் புத்தி அவனுக்கு அச்சமயம் அஸ்தமனமாகிவிட்டது. ஆனால் பிரதிப் பிரயோஜனமாக ஒன்று கேட்கவேண்டும் என்ற நினைப்பு மட்டும் இதழ் இடையில் உறுத்திக் கொண்டிருந்தது.

"நாளைக் காலையில் வந்து சொல்லுங்கள்"

"சரி"

அவள் அங்கிருந்து நகர்ந்தாள். கிருஷ்ணன் தொண்டையில் ரவாலாடு அடைத்துக் கொண்டமாதிரி ஓர் உணர்ச்சி.

"இப்படிப் பக்கத்தில் வா"

"ஐயோ........வேண்டாம்"

"அப்படியானால் நான் சொல்லமாட்டேன்" இப்படிப் பிகு செய்தான் கிருஷ்ணன்.

தாயன்பு அவள் நெஞ்சை வந்தடைத்தது. கிருஷ்ணன் விளையாட விரும்பும் கொள்கையும் பிடிக்கவில்லை. அம்மாவின் மன வேதனைக்கு மருந்து கண்டு பிடிக்க வந்து தன்னைப் பலி கொடுக்கவும், அம்மாவின் வேதனையை ஊர்சிதப்படுத்தவும் அவள் தயங்கினாள்.

"இங்கேயே நிற்கிறேனே"

"அப்படிச் சொல்லவேண்டிய அவசியமில்லை. நான் ஒரு கத்தல் போட்டு விடுவேன்."

"ஐயோ வேண்டாம். என்ன சொல்லுங்கள்."

இடைவெளிச் சற்றுக் குறைந்தது. கிருஷ்ணன் தன்னிடம் உதவி கோரியவளிடம், "ஒன்றேஒன்று" என்று பேரம் செய்தான்.

கண்ணம்மா, "நாளை இந்த நேரம் இங்கே வருவேன்; ஒன்றென்ன ?" என்று பின்வாங்கினாள். யுத்தங்களில் பின்வாங்குவது தந்திரமாக இருக்கலாம். ஆண்—பெண் சந்திப்பில் பின்வாங்குவது ஏமாற்றுவித்தை யென்ற ஆக்ரோஷத்தில் வந்தல்லவா முடிகிறது. தாவிப்போய் அவள் கரத்தைப் பிடித்தான். அவள் உடம்பு நடுங்கிற்று. இருளாக இருந்ததால் கண்ணின் மிதப்புக்களை பார்க்க முடியவில்லை. அவள் நெற்றியில் உஷ்ணக்காற்றும் குளிர்ந்த ஸ்பரிசமும் பட்டது; கிருஷ்ணனுக்கு வான வீதியில் மிதப்பது போன்ற இன்ப உணர்ச்சி. தன்னையும் தனக்கு வந்த வெகுமானத்தையும் தள்ளமுடியாமல் கதறினால் ஆபத்தென்ற நிலையில் கண்ணம்மா விடுவித்துக்கொண்டாள்.

கிருஷ்ணன் சொல்லும் பேச்சிலே மாறுவது கிடையாது. சொன்னால், ஒன்று என்றால் ஒன்றுதான். அந்த

மாதிரி உயர்ந்த புத்தி உள்ளவன் முகந்தெரியாத இருளிலே, அவள் கையைப் பிடித்துக்கொண்டு, "நீ பொல்லாதவள் கண்ணு; உன்னைத் தண்ணீருக்குள் அமுக்கிக் கொல்ல நினைத்தேனே!" என்றான்.

அவன் குரல் பரவாதிருக்க, அவனது வாயை மெல்லிய கரங்களால் பொத்தினாள். அந்தக் கைவிரல் எவ்வளவு நடுங்கின; ஆனால் எத்தனைக் குளிர்ச்சித் தாமரைத் தண்டுபோல!"

"என் அம்மாவிடம் வந்து சொல்லுங்கள். நான் தவறு செய்யவில்லை என்று சொன்னால், அவள் மனம் திருப்திபடும்."

கிருஷ்ணன் விழித்துக் கொண்டான். அகப்பட்டச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தத் தானே மனிதன் பிறந்தது. "நீ தவறு செய்யவில்லையா?"

அவள், "உஷ்" என்று நழுவினாள்.

அவனாக, "நானே வந்து சொல்லுகிறேன்" என்றான். அவள் ஓடினாள். அது காரிருளில் மின்னல் மின்னி மறைந்தது போல இருந்தது.

சொன்னால் சொன்னபடி செய்யக் கூடியவன், கிருஷ்ணன். காலையில் தன் சித்தியிடமும், சித்தப்பனிடமும், கண்ணம்மா ஒரு குற்றமும் செய்யாதவள் என்று சொன்னான். அப்படிச் சொன்னதோடு, தானே அவர்கள் வீடு புகுந்து சொல்ல நினைக்கிறதாகவும் தெரிவித்தான்.

"அந்தப் பிள்ளை ஒன்றும் செய்யவில்லையென்றால்?" என்றான் சித்தப்பன்.

"தன் மகளை நினைத்து, அவள் வருங்கால வாழ்வு என்னாகுமோ என்று தாய் பயப்படுகிறாள்; அன்னந் தண்ணீர் இல்லாம இருக்கிறாளாம்."

"உனக்கு யார் சொன்னது?" என்றாள் சித்தி. கிருஷ்ணன், "நீதானே காலையில் சித்தப்பாவிடம் பேசிக் கொண்டிருந்தாய்" என்றான்.

"சரி சரி வா. என்னோடுவா. போய் சொல்லி அந்தப் பெண்ணையே உனக்குக் கேட்கலாம்!" என்று சித்தி சொன்னதும், வாய் எல்லாம் பல்லாகத் தெரிந்தது!

சித்தியுடன் போனான் கிருஷ்ணன். அடுத்த வீட்டுக்குள் கண்ணம்மா பாத்திரபாண்டங்கள் தேய்த்துக்கொண்டிருந்தவள், காலடி ஓசை கேட்டு, "யாரது?" என்று இயல்பாகக் கேட்டாள். அவள் இயற்கை சுபாவம் போய்விடவில்லை.

"அம்மா எங்கே?" என்று இவனுடைய சித்தி கேட்கவும், அழுது வீங்கியிருந்த முகத்தோடு ஒரு மூலையிலிருந்து வந்தாள் அவள் தாயார் வெள்ளையம்மா. சற்று விம்மலும் கண்ணீர்த் துடைக்கின்ற படலமும் நிகழ்ந்தன

"உங்கள் மகள் எவ்விதத் தப்பும் செய்யவில்லையாம் அம்மா. என் அக்கா மகன் கிருஷ்ணன் வெளியூர்க்காரன் அல்லவா. இவளுடைய போக்கைப் புரிந்துகொள்ளாமல், தன்னைப் பரிகாசம் செய்வதாக நினைத்துக் குளத்திலேயே அமுக்கிக் கொன்றுவிடும் எண்ணத்தோடு குதித்தானும். இப்போதுதான் அவள் வெகுளி, இவன் முன்கோபி என்று புரிந்தது. உன் மகளைப் பற்றி யாரும் எதுவும் சொல்லமுடியாது. நீ மனசிலே போட்டு நைந்துபோகாதே வெள்ளையம்மா. இதோ வந்திருக்கிறான் கிருஷ்ணன்.

உன் மனம் படறக் கஷ்டத்தைத் தாங்காமல் தானே வந்து சொல்லுகிறதாகச் சொன்னான். அழைத்து வந்தேன்." என்று வக்காலத்து வாங்கிப் பேசிமுடித்தாள் கிருஷ்ணன் சித்தி.

கண்ணம்மாவின் தாய் ஹீன சுரத்தில் பேசும்போதே, கண்ணீர் முத்து முத்தாய் கன்னங்களில் வடிந்தன. 'ஒரு வயதுப் பெண்ணுக்குக் களங்கம் வந்தால், அப்புறம் அவள் வாழ்வு என்னாகும்?' என்ற நினைப்புத்தான் அவள் நெஞ்சை அறுத்துக்கொண்டிருந்தது.

"நீங்களா சொன்னால் சரி" என்றாள்.

"இல்லேம்மா. உங்கள் மகள் யாரிடமும் படபடவெனப் பேசும் பழக்கம் எனக்குத் தெரியாது. நான் தவறாக எண்ணிவிட்டேன். இந்தமாதிரி அவள் பேசியதும், நான் குளத்தில் குதித்துக் கொல்லப்போனதும் வேறு யாருக்குமே தெரியாது. நீங்கள் மனம் கலங்கவேண்டாம். ஊரில் ஒருவரும் ஒன்றும் பேசிவிட முடியாது. வா சித்தி போகலாம். வரட்டுமா அம்மா......" என்று கிளம்பினான்.

வெள்ளையம்மாவின் துக்கம் தோய்ந்த முகத்திலே நன்றியும் நம்பிக்கையும் மலர்ந்தது. கிருஷ்ணன் மறைவாக நின்று கண்குளிர வீட்டுக்குள் பார்த்தான்; ஆனால் கண்ணம்மா தென்படவில்லை.

கிருஷ்ணன் நடை இறங்கிய பின்பு, அவன் சித்தி "நீ போப்பா; நான் ஒரு வார்த்தைப் பேசிவிட்டு வருகிறேன்," என்று போனாள். சாடைமாடையாகக் கலியாணப் பேச்சையும் எடுத்தாள். தன் மகளுக்குக் கலியாணம் நடத்தவேண்டும் என்றும், தன் அண்ணன் முதலியவரைக் கேட்டு, நிச்சயம் செய்யும்போது அவசியம்

கிருஷ்ணனைக் கவனிப்பதாகவும் சொன்னாள் வெள்ளை யம்மா.

வெள்ளையம்மா, கிருஷ்ணன் சித்தி வீட்டார் ஏதாவது கன்னாபின்னாவெனப் பேசித் தங்கள் குடும்பத்தைக் கவிழ்த்துவிடக் கூடாதேயென்று பயந்துதான், மிக கவலைப்பட்டாள். அவள் மன அநுசரணை போலவே, தன் மகளைப்பற்றி அவர்கள் வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ என்று பேசாதவரை சந்தோஷப்பட்டாள். பாவம், இதற்குக் கண்ணம்மாள் தூது சென்றது, அவள் 'ஒன்றுபெற்றது' யாருக்குத் தெரியும்?

கண்ணம்மாளைப் பற்றி அந்த ஊரில் யாரும் தவருகப் பேசமுடியாது! ஆனால் அவள் வாயாடி, துடுக்குக்காரி, பதிலுக்குப் பதில் சுடச் சுடக் கொடுப்பவள் என்ற எண்ணம் இருந்ததினால், யாரும் அவளைப் பெண்ணுகச் சிபார்சு செய்யப் பயந்தார்கள். இரண்டொரு இடங்களில் பெண்ணைக் கேட்டபோது, "மாப்பிள்ளை பெரிய வாயாடி; கஜ போக்கிரியாக இருக்கவேண்டும்; அயர்ந்து போனால், ஜன்னல் வழியாக நடுவீதியில் தூக்கி எறிந்துவிடுவாள்" என்று ஏகமனதாகச் சொன்னார்கள்.

வெள்ளையம்மாளின் மனசில் இருந்த அந்தரங்கம் வேறு: மதவக்குறிச்சியை விட்டு, அண்ணன் ஊருக்குப போய் அடக்க ஒடுக்கமான வாழ்வு ஆறுமாதம் வாழ்ந்து, தன் பெண்ணைத் திருமணம் முடிக்க நினைத்தாள். இந்த எண்ணம் அவள் மனசிற்குள் புகுந்திருந்ததோடு சரி. யாருக்கும் வாய்விட்டு சொல்லவில்லை.

மீண்டும் சந்தோஷத்தோடு வீட்டுக்கும் வாசலுக்கும் நடக்க ஆரம்பித்தாள்; மகளை வீட்டுக்குள் வேலை பார்க்க

ஏவிவிட்டுத் தானே தண்ணீர் தூக்கிவரப் புறப்பட்டாள். கண்ணம்மா, நொடிக்கு நூறுதரம் வீட்டுக்கு வீடு புகுந்து வருவதை அறிந்தவர்கள், அவள் வராமல் போகவே, பொழுதுபோகாமல் தவித்தார்கள்.

எங்கும் "கண்ணம்மா எங்கே? எங்கே கண்ணம்மா?" என்று தவித்தார்கள்.

கண்ணம்மாளின் கபடமற்ற சரளமான பேச்சு; மனோகரமான நடை; எப்போதும் புன்னகையுமிழும் இதழ்கள்; புதுமலரைப் போன்ற வசீகரத் தோற்றம், குதூகலமான குரல்; நீண்ட மருள மருள விழிக்கும் விழிகள்; மின்னல் கொடிபோன்ற மெல்லிய தேகம்—என்றாலும்கட்டுமஸ்தான—ஆனால் சொகுஸான—மிருதுத் தன்மையுள்ள உடம்பு; வர்ணனைக்கு அடங்காத கொள்ளை கொள்ளும் அழகு; கிராமத்திலே வயோதிகர்கள்கூட அவளோடு சிரித்துப் பேச ஆசைப்படுவார்கள்.

அந்த ஊர்க்காரர்களுக்குள்ளே வேடிக்கையும் விளை யாட்டும் அஸ்தமித்து விட்டமாதிரி இருந்தது. "கண் ணம்மாஏது வரக்காணோம்?" என்று தவித்தார்கள்.

முக்கியமாக, கிருஷ்ணனுக்கு நொடிக்கு நூறுதரம் பின் பக்கத்துத்தோட்டத்தில் போய் நிற்கத் தோன்றும். அவன் வாழ்வின் இலட்சியம் அவளைச் சந்திப்பது; இலட்சிய வாழ்வு அவளோடு வாழ்வது என்றுகூடக் கற்பனை செய்தான்.

பச்சிளம் மஞ்சள் குறுத்துப்போலத் தளதளவென்று வாளிப்பாக இருந்த தோள்கள் அடிக்கடி கண் முன் வந்து நிற்கும். நிமிர்த்தியபோது ஒளியும் இருளும் கலந்த

ஈரடியான நேரத்திலும் தெரிந்த முகம் அவன் மனத்திரை யில் சலனமிட்டது.

பொழுது எப்போது சாயும் என்ற ஏக்கத்திலேயே கிருஷ்ணன் சிந்தனைச் சக்கரம் சுழன்றது.

"ஏண்டாப்பா கிருஷ்ணு, நீயும் வாயேன். வல்லான் கோட்டையிலே அரைக்கோட்டை சம்பா விதை இருக்குது. தலைச்சுமையாக எடுத்து வந்திடலாம்; உன் தங்கக் கையாலே விதை எடுத்து வந்து விதைக்கலாம்" என்று அழைக்கவே, கிருஷ்ணன், எலி, பத்தாயத்தில் சிக்கிக் கொண்டதைப் போல விழித்தான்.

என்ன காரணம் சொல்லித்தான் வரவில்லை எனச் சமாளிப்பது?

"நல்லாத்தான் நீங்க அவனையும் தலைச் சுமையாக அஞ்சுகல்லு, நெல்லு தூக்கி வர கூப்பிட்டீங்க. 'அலுத்துப்போய் அக்கா வீட்டுக்கு வந்தாளாம்; அக்கா தூக்கி எங்கேயோ போட்டாளாம் என்ற கதையாக, போதும் போதும், வண்டியைக் கட்டிக்கொண்டு போங்கள்" என்றாள் சித்தி.

அவனுக்கு அமிர்த தாரையாக இருந்தது. மலைபோல வந்த இடர் பனி போலக் கலைந்து, மீண்டும் மூட்டம் கவிழ்ந்தது.

"தலைச் சுமையாகத் தூக்க வேண்டாம் வண்டியைக் கட்டு; நாம் ரெண்டு பேரும் போய் ஜாலியாக வந்து விடலாம்" என்றார்.

இதற்கு என்ன பதில் சொல்லுகிறது?

"அந்தக் கல்லாம் பறம்புக் காட்டைப் பார்க்கத்தான் வந்துதோ; போயும் போயும் உடமுள்ளும், கல்லுங்கரடுமா மொட்டை வண்டியைப் போட்டுட்டுப் போங்க! போனதும் வந்ததுமா ஓடி வாங்க."

சித்தி அவன் கண்களுக்குத் தெய்வமாக இருந்தாள். தன் மனம் அறிந்தே அவள் இடர் களைவது போல இருந்தது. சித்தப்பா, மறு பேச்சுப் பேசாமல் வண்டியைப் பூட்டிக்கொண்டு, புறப்பட்டார்.

பொழுதும் பறந்து கொண்டிருந்தது. 'தன் சித்தியையும் ஏமாற்றியல்லவா, அவளுக்கும் தெரியாமல் சந்தித்தோம், சந்திக்கவும் பேசினோம்' என்று குதூகலம் அடைந்தான்.

வீட்டிலுள்ள சித்தி, வெள்ளிக் கிழமையாதலால் காந்திமதியம்மன் கோவிலுக்குத் தீபம் ஏற்றப் போய் விட்டாள். கிருஷ்ணனைத் தவிர, வீட்டில் மாடு கன்றுகளே இருந்தன. இருட்டி இரண்டு நாழிகை ஆகியும் கண்ணம்மா வரவில்லை. வாக்குச் சொன்னபடி வருவாள், தான் இனிமையாகப் பொழுது போக்கலாம் என நினைத்தான்.

பாவம், அன்றென்ன, மறுநாள், மூன்றும் நாள் அங்கே காத்திருந்தும் வரவில்லை. அதிகமாக அவள் வீட்டுக்கு வெளியே நடமாட்டம் கூட இல்லை. கண்ணம்மாவின் பேச்சு அடுத்த வீட்டுக்கே கேட்கவில்லை. கண்ணம்மா, தன்னை ஏமாற்றிவிட்டாள். தன் நல் வார்த்தைகளைப் பயன்படுத்தித், தன்னை ஏமாற்றி விட்டாள். இனி வரமாட்டாள் என்று ஊர்ஜிதம் செய்தபோது தான் அவனுக்குத் தன் 'இளிச்சவாய்ப் புத்தி' தெரிய வந்தது.

## வாழ்க்கைப் புயல்

நயவஞ்சகி, காரியக்காரி, ஏமாற்றும் ஜாலக்காரி— இவ்வாறு பிரம்மாண்டமான உருவங்களைக் கற்பனை செய்தான் கிருஷ்ணன். அவள் அப்படியெல்லாம் பிரம்மாண்டமான காரியம் செய்கிறவளா? பெண், தன்னைக் காப்பாற்ற, தன் தாயைத் திருப்தி செய்ய, ஒரு பொய், ஒரு நிமிஷ நேர ஜாலக்குச் செய்தாள். அதை உண்மையென நினைத்தவன் அல்லவா முட்டாள்!

வீடு புகுந்து, உண்மையாகத் தன்னை மாட்டுக் கொட்டிலில் சந்தித்து, கெஞ்சியது, 'ஒன்று கொடுத்தது' உள்பட சொல்லிவிட வேண்டுமென்ற ஆத்திரம் வந்தது. நாலு நாளுக்கு முன் நன்னடக்கை ஜாமீன் கொடுத்துவிட்டு, இப்போது பொய்ச் சொன்னால், யார் நம்புவார்கள். ஆதியில் நடவாததை நடந்ததாகப் பழி; பின்னர் நடந்தபோது அது நடக்கவில்லை என்று மெய். பொய்யும் மெய்யும் இணைந்த பிறகு இனி மெய்க்கு இடமில்லை என்பதை எண்ண எண்ண அவன் ரத்தம் கொதித்தது.

"ஏண்டா கிருஷ்ணு, இந்தப் பெண் இல்லாது போனால் இன்னொருப் பெண்!" என்றாள். அவனுக்குத் தலையிலே இடி விழுந்தமாதிரி இருந்தது. ஆனாலும் ஆறுதல்; 'இப்படிப் பொய் சொல்லி, ஏமாற்றும் கைக்காரியை வாழ்வுக்குத் துணைவியாக ஏற்கலாமா? ஏன் கூடாது? இப்படிப் பட்டவளைத்தான் வாழ்வுக்குக் கை பிடித்து அடக்கி ஒடுக்கி வாழ வேண்டும்! அதுவே ஆண்மை வீரம்.' இப்படி இருதலை கொள்ளியாக அவன் நெஞ்சம் வெந்து சாம்பலாகிக் கொண்டிருந்தது.

ஆனாலும் 'அந்த ஒரு நிமிஷப் புல்லரிப்பு' மறக்கக் கூடியதா?

"நீ ஊருக்குப் போய் கடுதாசி போடு; அவுங்க மாமன் மகளுக்குச் சடங்குன்னு போனுங்க. மாமன்—மற்ற இன ஜனங்களைக் கலந்து சொல்லுமாம். அட, இந்தக் கண்ணம்மா இல்லே, ஆயிரம் தங்கக் கட்டிகள் இருக்குது கிருஷ்ணு."

கிருஷ்ணனுக்குக் கண்ணம்மா மீது காதல்கூட இல்லே; கோபம். பழி தீர்க்கவேண்டும் என்ற ஆவல்தான் மிகுந்திருந்தது. தன் ஊருக்குப் போகுமுன்பு எப்படியும் அந்தப் பெண்ணைக் கேட்டுவிட வேண்டும். அவள் மாய் மாலத்தை, சொன்னசொல் தவறியதைச் சுட்டிக்காட்டிப் பளார் பளார் என்று கன்னத்திலும் கொடுக்கவேண்டும், நாலறை! ஆனல் வெள்ளையம்மா போதனைப்படி, இறைந்துபேசாமல், வீட்டுக்கு வெளியே தலைகாட்டாமல் பொம்மையாக இருக்கத் திட்டமிட்டாள் கண்ணம்மாள்.

கிருஷ்ணன் எதிர்பார்த்த சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. அவளை மறந்து, மதவக்குறிச்சியை விட்டு தன்னூர் ஏரலுக்குப் புறப்பட்டான். விடியற்காலத்துக் கோழி கூவும் சமயம் சித்தி கட்டிக்கொடுத்த மூட்டை, தோசைப் பொட்டலம், தன்னுடைய துணிமணிகள் எல்லாம் சுமந்து கொண்டு வாசல்வரை சித்தி வழியனுப்பத், தெருவரை சித்தப்பன் கொண்டுவந்துவிட, இவன் புறப்பட்டான்.

பிள்ளையார் கோவில் தெருவைத் தாண்டி, ஒத்தயடித் தடத்திலே இறங்கிப் பனிவிடலி போய்க்கொண்டிருந்த போது, அவன் எதிர்பாராதவிதமாக ஒரு உருவம் அவன் பின்னே ஓடிவந்தது. மோகினியோ பிசாசோ என்று பயந்து இவன் ஓட ஆரம்பிக்கவே, "நான்தான் கண்ணம்மா" என்று குரல் கேட்டது. அவனல் நம்ப

முடியாமல், மனப்பிரமையெனச் சந்தேகம் கொண்டான். பயத்தினால் அடியெடுக்காமல் நிற்கவே, "நான்தான் கண்ணம்மா" என்று அவன் எதிரே வந்து நின்றாள். அவள் நின்றும், ஓடி வந்ததினால் எழுந்த பெருமூச்சு நிற்கவில்லை.

"போதும் போதும். ரொம்ப ஒழுங்குதான்" என்றான்.

"அப்படிச் சொல்லாதே. உன்னை வந்து பார்க்கணுமின்னு நெனைச்சாலும் முடியலே, எங்கம்மா என்ன நினைக்கும்?"

"என்ன நினைக்கும்?" என்றான் ஆத்திரத்தோடு.

"நான் நல்லுவன் என்ற பிறகு, உன்னைச் சந்திக்க வந்தால்?"

"வந்தால்?"

"தப்புத் தண்டாவாக நினைக்கும்."

"இப்போ மட்டும்?"

"யாருக்குத் தெரியும். நிஜமா நான் உன்னைக் கன்னிப்பின்னவென்று தோட்டத்தில் வைத்துத் திட்டிவிட்டேன். என்னை மன்னிச்சு விடு."

"நீ பெரிய கள்ளி." அவன் அவளைத் திரும்பிப் பார்க்காமல் நடந்தான். அவனுக்கு முன்னால் வந்து மறிக்கத் தடத்தை விட்டுப் பக்கவாட்டத்தில் போனபோது முள்ளொன்று அவள் பாதத்தில் புகுந்துவிட்டது! ஐயோ முள் குத்திட்டுதே' என்று ஒற்றைக் காலில் துடிக்கவே, அவன் நெஞ்சின் வைரம் இளகி, "எங்கே?" என்றான். அவனது தோளைப் பிடித்துக்கொண்டு,

தள்ளாடித் தள்ளாடிக் காலிலிருந்து முள்ளைப் பிடுங்கினாள். முள்ளைப் பிடுங்கியதும், பிடித்திருந்த தோளை வெடுக்கென விட்டுவிட்டு, "அப்பாட எவ்வளவு பெரிய முள். அப்போ நான் வர்றேன்" என்று திரும்பினாள்.

"எங்கே வந்தே; எங்கேப் போறே? உன்னை எனக்குப் புரியவில்லை."

"நீங்க வந்து என்னைப்பத்தி அம்மாவிடம் சொன்னத்துக்கு என்னோட சந்தோஷத்தைத் தெரிவிக்க வந்தேன்......"

அவள் மேலே பேசுமுன்பாக, காட்டுழவுக்காக ஏர் மாடுகளை ஓட்டிக்கொண்டு ஒருசிலர் புறப்படும் மணி யோசையும், ஆள் அரவமும் காலைந்து விளைகளுக்கு அப்பால் கேட்டது.

"விடிந்துவிடும், நான் வரட்டுமா?"

"உன்னைக் கண்டால் என் கோபம் போய்விடுகிறது; காணாவிட்டால் தலையைத் திருக வேண்டும்போல் இருக்கிறது கண்ணம்மா."

"சந்தோஷம்"

"எங்க சித்தி, என் கலியாண சம்பந்தமாகக் கேட்டாளே, அதுக்குப் பதில் என்ன?"

"அம்மா அம்பாசமுத்திரம் போறது. அங்கே மாமன் எல்லோரிடமும் கேட்டு, முடிவு சொல்லும்."

"அப்போ, நீ"

"நான் அதுக்குச் சம்மதித்துவிட்டேன்."

"எதுக்கு? அம்மா பேச்சுக்கா?" என்றதும் கலகல வெனச் சிரித்தாள்.

"எப்படியும் வைச்சுக்கோ?"

"நீயோ இங்கே வந்திட்டே; இப்படியே நாம் ஓடிப் போயிடலாம்."

"அம்மாடி, அதுதான் வேண்டாம். இன்னும் ஒரு மாசம் பொறுத்திரு."

"நாலாம் நாள் சொன்னியே!"

"என்பேரில் தவறில்லே"

"சும்மா ஓடிப் போயிடலாம்," என்று அவள் கரத்தைப் பிடிக்கப்போனான் கிருஷ்ணன். கண்ணு விலகி நின்றாள்.

"நான் ஒண்ணு கேட்கப்போறேன்......அட, இப்படி ஏன் முழிக்கிறே. நீ என்னை கண்ணாலம் செய்யாம போயிட்டே.....? அப்போ."

"அது ஏன் அப்படி இல்லாததைப் பேசணும்; நமக்குள் கலியாணம் நடக்கும்."

"உலகத்திலே நாம நினைக்கிறபடியா நடக்குது; சொன்னபடி நிறைவேற்ற முடியலே."

"முடியலே?" என்று எக்காளமாகச் சொன்னாள்.

"அப்போ நான் ஒண்ணு செய்யப்போறேன்"

"சொல்லு, சொல்லு நடக்காததைச் சொல்லு." அவள் கல கல வெனச் சிரித்தாள்.

"நீ வேறெ யாரையாவது கட்டிக்கிட்டு குடும்பம் நடத்திற காலத்திலே நான் வந்து நம்மோட சினேகி

த்தை சொல்லுவேன்; உன்னோட சந்தோஷத்தைக் கெடுப்பேன்."

"அது ஏன்?"

"இந்த நாலுநாளா நான் பட்ட மன வேதனை உனக்கு எப்படித் தெரியும்?"

"நீ யாரோ; நான் யாரோ. நாம் புருஷன் மனைவி ஆன பிறகில்லே உன் வேதனையிலே நான் பங்கு கொள்ள ணும்."

"அடடா, என்ன புத்திசாலித்தனம்!"

"உன்னை மறக்கமாட்டேன்! மறக்கிறதுக் கஷ்ட மாக இருக்கிறது" என்றாள் கண்ணம்மா.

"நிஜமாத்தான். நீ சொன்ன இந்த சொல் லையும் மறக்கமாட்டேன். வேறெ கட்டிக்கொண்டால் எப்படியாவது உன்னோட வாழ்வைக் கெடுத்துப் போடு வேன்."

"ஆ! பேஷா செய்," என்று எக்காளமாகச் சொன் னாள். அவளுக்கு நம்பிக்கை இருந்தது நிச்சயமாக கிருஷ் ணனைத் தான் கட்டிக் கொள்ள முடியும் என்று உறுதி யாக நம்பினாள்.

கிருஷ்ணன், "நீ வாய்ச்சொல் தவறினது முதல் முறை மன்னிப்பு; இரண்டாம் முறை வஞ்சந்தான். நீ அசல் மனுஷி; மனுஷன் மனுஷ குணமா, இருக்கணு மின்னு இப்போ இந்த ஆள் சந்தடியில்லா இடத்திலே, காலைக் கருக்கல்லே உன்னை விட்டுவைக்கிறேன், போயிடு" என்று வெற்றிவீரனைப்போல நடந்தான்.

கண்ணம்மா மனசிலே, கிருஷ்ணனின் தூய உள்ளம், அவன் பெருந்தன்மை ஐக்கியமாயிற்று. இருளோடு இருளாக அவன் கிழக்கே உதித்தெழும் சூரிய கிரணங்களில் தெளிவாகத் தெரியும்வரை, பார்க்க ஆசைப்பட்டாள். அடுத்த விநாடி தன் வீட்டுக்கும், தான் நிற்குமிடத்திற்கும் உள்ள தூரத்தை நினைத்ததும், அவள் மான்போல துள்ளி ஓட ஆரம்பித்தாள்.

ஒரு மாதம் சென்றது. சித்தி சித்தப்பா கடிதம் போடவில்லை. அதற்கும் மேலாக இவன் கடிதம் எழுதி கேட்டதினால் இரண்டு மாதத்திற்குப் பிறகு பின் வந்த கடிதம்:

சிரஞ்சீவி கிருஷ்ணனுக்கு,

இங்கே மங்கை மாடுகளும் ஆடுகளும் சுகம். அவ்விடம் சுகலாபத்திற்கு எழுது. அடுத்த வீட்டுக் குட்டி கண்ணம்மா, நீ ஊருக்கு போன மறுவாரம் தாயோடு அம்பாசமுத்திரம் போய்விட்டாள். அங்கிருந்து வரவேயில்லை. அவளுடைய தாய்மாமன் முயற்சியில், அங்கே யாரோ ஒருவனைக் கட்டிக்கொண்டதாகவும் தெரியவந்தது. அந்த வாயாடிப் பெண் உனக்குக் கிடைக்காமல் போனதற்கு நீ, சனீஸ்வரபகவானுக்கு ஒரு மண்டலம் தீபம் போடு. இந்த ஊரில் இன்னொரு பெண் இருக்கிறது. தங்க விக்ரகம்; சொத்தும்......

இப்படி மேலே இன்னும் இருந்த விவரங்கள் கிருஷ்ணனுக்குப் பிடிக்கவில்லை. தன்னை வஞ்சித்து, ஏமாற்றிவிட்டாள் என்ற ஒரே முடிவுதான் கிருஷ்ணனுக்கு இருந்தது. கண்ணம்மாவின் புருஷன் யார்? அவள் எங்கே வாழ்க்கைப்பட்டாள் என்ற விபரம் அறிய ஆவல் துடி

துடித்தது முதலில். ஆனால் தனக்கு என்ன உரிமை என்று நினைத்தபோது அது பைத்தியக்காரத்தனமாகப் பட்டது. தான் என்ன உரிமையோடு ஒரு பெண்ணின் வாழ்வைக் கெடுக்கவேண்டுமென நினைத்தான். மறந்தான்.

காலவேகத்தில், கண்ணம்மாவை மறந்தும் விட்டார் கிருஷ்ணக் கோனார்.

மறந்த அந்தக் கண்ணம்மாள் இப்போது எதிரே இருக்கிறாள். தேடிப்போகாத அந்தக்கொடி இப்போது மனசில் சுற்றிப் படருகிறது. அதுவும் உயிருக்குயிரான நண்பன் மனைவியாக இருக்கிறாள்!

கண்ணம்மா, புதிதாக வாங்கி வந்த பசுவைப் பார்த்து ஆனந்தப்பட்டு, நெற்றிக் குங்குமம் தடவும் போது "வாப்பா, உள்ளே வா" என்று அவள் புருஷன் கிருஷ்ணனைக் கூப்பிட்டான்.

"யாரு அது?"

இந்தக் குரல் கிருஷ்ணன் காதில் விழுந்தது. ஆனால் அந்தக் குரல் மட்டுந்தானா?

"உன்னை வந்து பார்க்கணும் பார்க்கணுமின்னு நினைச்சேன்; முடியல்லே, எங்கம்மா என்ன நினைக்கும்" என்று ரீங்காரமிடுவதுபோல ஒலித்தது. முள் தைத்தது, தன் தோள் பிடித்து எடுத்தது, கலகலவென சிரித்தது, "நமக்குள் கலியாணம் நடக்கும்" என்ற சொற்களும் அலைமோதின.

கண்ணம்மாள் நிலைமையைச் சமாளித்துக்கொண்டாள். கிருஷ்ணன், "மாட்டைக் குளிப்பாட்டியாச்சா?" என்று பேச்சை மாற்றினான்.

"ஆமாப்பா, நீ கிணத்துப் பக்கம் போனயா பல் விளக்க. இங்கே கண்ணு—இவள் பெயர் கண்ணம்மா—கண்ணு நான் சொல்றது சுறுசுறுப்பா எல்லாம் முடிச்சுப் போட்டுது. உனக்குக் கண்ணைக் கூடத்தெரிஞ்சிருக் கலாம்."

"எங்கோ பார்த்த நினைப்பும் இருக்கு!"

கண்ணம்மாள், வீட்டுக்குள் போய் நண்பர்கள் பேச்சில் காதைப் பதித்திருந்தாள்.

"உங்க சித்தி ஊரு இருக்குதே, மதவக்குறிச்சி"

"ஆமா"

"அந்த ஊருதான்"

"அப்படியா?"

"ஆனு, இவ மாமன் ஊரு அம்பாசமுத்திரம். அங் கேயே இந்தப் பெண் இருந்துது. நானும் அந்த ஊர்ப் பக்கம் போக, அப்பாலே கலியாணப் பேச்சு வந்தது. அதோ வர்ருன் பாரு, நம்ம மைனர் மாணிக்கம்."

இரண்டு வயதுள்ள சிறுபையன், பிறந்த மேனியாய்க் கண்ணைக் கசக்கிக் கொண்டுவந்தான். தகப்பன் தனக்குத் தின்பண்டம் வாங்கி வந்திருப்பான் என்ற நம்பிக்கை யோடு, காலைத் தரையில் தேய்த்துக்கொண்டு வந்தான் மாணிக்கம்.

"வாடா பயலே, உனக்குப் பக்கோடா!" என்று மடியிலிருந்து பொட்டலத்தை எடுத்துக் கொடுத்தார் சந்தனக் கோனர்.

"இது அவள் பிள்ளை; என் பிள்ளையாகக் கூட இருக்கவேண்டியது!" என்ற நினைவு வரவே எதிரே இருந்த

சிறுபையன் உருவம் மறைந்தது. அந்தச் சின்னஞ்சிறு பசலைக்குப் பதில் கண்ணம்மாளே கண்ணைக் கசக்கிக் காலைத் தேய்த்துக்கொண்டு வருவதாக எண்ணினார் கிருஷ்ணக் கோனார்.

"பய பொல்லாத பய. வாய் வாய், என்னவாய்?" என்று புத்திர பாக்கியத்தைப் புகழ்ந்தார்.

"உன் வாய், அவனுக்கும் இருக்குமே"

"நானா வாயாடி; இவன் அம்மா. தாயைப் போல பிள்ளை" என்றார் சந்தனம். ஏதோ நினைப்பு வந்து ஆமா, கிருஷ்ணா, நீயேன் என் கலியாணத்துக்குக் கூட வரலே. உன் ஊர் ஏரலுக்குக் கடுதாசி போட்டேனே!" என்று சொன்னார்.

"நான்தான் ஊர் சுற்றுகிறேனே; கடுதாசி எப்படி வந்திருக்கும், ஏரலைவிட்டு வெகுநாள் ஆச்சு. இங்கே நான் சாப்பிட்டுட்டுப் புறப்பட வேணும்."

இதைக் கேட்டுக், கண்ணம்மாள் மனங்குளிர்ந்தாள். வீணாய் வெறுங்கனவாய், "நீ வாய்ச்சொல் தவறினது முதல்முறை மன்னிப்பு; இரண்டாம் முறை வஞ்சகந்தான்" என்று என்றோ சொல்லிய சொற்கள் தேய்ந்து மண்ணாகிப் போவதை நினைத்துப் பூரித்துப் போனாள்.

"இந்தா கிருஷ்ணா, போகலாம். நீ ஊருசுத்தறவன். இருந்தே போகிறது, என்னய்யா குடி முழுகிப்போகுது, பொஞ்சாதியும் புள்ளை குட்டியும். இங்கேதான் ஆறுமாதம் இரேன்" என்று நட்புரிமை பாராட்டவே கண்ணம்மாளுக்குத் தலை சுற்றியது. நெருப்பை மடிக்குள் கட்டுவது போன்ற உணர்ச்சியைப் பெற்றாள்.

அன்றையப் பொழுது எப்படியோ நகர்ந்தது.

'சோ'வென நாலைந்து நாட்களாக மழை. மழை பிடித்துக்கொண்டு எங்கும் நசுநசுப்பும், சகதியுமாக இருந்தது. அதிலும் நாலைந்து பால்மாடு உள்ள வீட்டில் எப்படி இருக்குமோ அப்படி இருந்தது சந்தனம் வீடு; கன்றுக்குட்டிகள் இல்லாமல் கறக்கும் வித்தை அந்த வீட்டில் கிடையாது. ஒவ்வொரு கன்றும் நாலுமாட்டின் தொந்தரவு தரக்கூடியது. மழையின் 'பிசுபிசுப்பு' இன்னும் ஓயவில்லை. மழை வானத்தைப் போலவே, கிருஷ்ணன் மனத்திலும் சிந்தனைகள் கவிந்து அடிக்கொருமுறை வானவில்லின் வர்ணங்களாகக் கண்ணம்மா காட்சி தந்தாள். மின்னலாகப் பழைய சம்பவங்கள் மின்னி மின்னி மறைந்தன.

வெளித் திண்ணையில் காலைத் தொங்கவிட்டு இளங் கன்றொன்று துள்ளித் திரிவதையும், அதன் தாய் அன்போடு அதை நக்கித் தன்பால் அணைத்துக்கொள் வதையும் கண்டான். "பசுவுக்குத்தானே இத்தனை அன்பு. இதன் காளை?" என்று நினைத்தபோது, "மாமா மாமா" வென்று கூப்பிட்டுக் கொண்டே சின்னப்பயல் மாணிக்கம் வந்தான். இரண்டு மூன்றுநாள் பழக்கத்தில் அவனுக்கு இருந்த பயமோ, வெட்கமோ கொஞ்சம் கொஞ்சமாக நழுவிவிட்டது.

ஒருமுறை துள்ளித்திரியும் கன்றையும் தள்ளாடி நடந்துவரும் குழந்தையையும் கவனித்தான். தாய்தான் வளர்ப்புக்கும், அன்புக்கும் வேண்டும்; தந்தையைப் பற்றி பசலைகளுக்குக் கவலையில்லை—இந்தச் சித்தாந்தம் மனசில் வேர்விட்டது. குழந்தையும் பின்னுகை வந்து அவர்

கழுத்தைக் கட்டிக்கொள்ளவே, அது கையிலிருந்த வெல்லம் அவர் உடம்பில் அப்பிக்கொண்டது.

சற்று அருவருப்பு; சிறிது அபிமானம்; ஓரளவு சுய நலம்; இவ்வாருக உணர்ச்சிச் சுழிப்புகளுடன், "வாடா பயலே!" என்று அசட்டுத்தனமாகச் சிரித்தார். பயல், உரிமை பாராட்டிக்கொண்டு, மடியில் உட்கார்ந்து, படுத்தும்கொண்டான். குழந்தையின் முகத்தைக் கிள்ளிஞர்; அது சிரிப்பது, அவள் சிரிப்பதாகப் பட்டது.

"அம்மா, 'ஆ' போட கூப்புதா?"

கிருஷ்ணன் புரிந்துகொண்டான். சாப்பிடக் கூப்பிட்டுப்போகப் பையன் தூது வந்திருக்கிருன். "நான் வர முன்னே பின்னே ஆகும், கிருஷ்ணு நீ சாப்பிடு. கண்ணு, அவன் முந்தி சாப்பிடட்டும்" என்று இருபக்கத்திலும் சொல்லிவிட்டுத் தவிட்டு மூட்டை எடுக்கப் போயிருந்தார் சந்தனக் கோனர்.

குழந்தையின் மதலை பேச்சு அவனுக்குப் புரிந்து விட்டது. வெளியே தூறல்; மனத்துள்ளே சிந்தனைச் சிதறல். பயல் கூப்பிட்டவுடன், எழுந்து போனல், முன்பு கண்ணம்மாவின் பேச்சைக் கேட்டு அவள் தாயிடம் "நல்லவள்" என்று சொல்லப்போன கதையாகிவிடும். தன்னை அவளே அழைக்கட்டும் என்றிருந்தான்.

அவள் அழைக்கவில்லை. ஒரு சொம்பில் தண்ணீர் வந்து திண்ணையில் உட்கார்ந்தது. "வா, மாம்மா, 'ஆ' போடலாம்" என்று பையன் இழுத்தான். "நீ போடா" என்று தூக்கிவிட்டார் கிருஷ்ணன். பையன் குதித்துக் கொண்டு ஓடிஞன்; உள்ளே தோசை சுட்ட வாசனை பயலுக்கு மூக்கில் அடிக்கவே ஓடிவிட்டான்.

பிசுபிசுத்த மழையும், தடம் பிறழ்ந்த மனமும் கிருஷ்ணனுக்குப் போட்டியிட்டு ஒவ்வொரு சம்பவமும் பெரியதாக நெஞ்சிலே, "வஞ்சம்! வஞ்சம்!" என்று பேரிடியாக ஒலித்தன.

வீட்டுக் குள்ளிருந்து கண்ணம்மா, "மாமா மாமா சாப்பிடவான்னு கூப்பிடுடா! என்று கிருஷ்ணன் காதில் விழும்படியாகக் குழந்தைக்குச் சொன்னாள். குழந்தை தனக்குத் "தோசை!" யெனக் கத்தினான். இந்த அவல நிலையைச் சமாளிக்க வேறு வழியின்றித், "தோசை சுடுகிறேன் சாப்பிடலாம்!" என்றாள். கிருஷ்ணன் துன்பத்தையே வெறித்துப் பார்த்தவர், காதில் சொல் விழுந்தும் அசையவில்லை. அவருடைய நிலையைப் புரிந்துகொண்டாள்; அவர் சிந்தனைகூட அவள் மனசிற்கு பிரதிபலித்தது.

கதவுக்கு அப்பால் அவள் நின்றாலும், அவர் மனதிற்கு எதிரே நிறுத்திக்கொண்டு, பலத்த விவாதம் செய்வதாக அவள் யூகித்தது ரொம்ப நியாயம்.

"சாப்பிடலாம்" என்று மீண்டும் சொன்னாள்.

கிருஷ்ணன், "சந்தனம் வரட்டும்!" என்று சொன்னார்.

"அவுங்களே சொன்னுங்க; நீங்க சாப்பிடலாம்."

"இல்லை வரட்டும்."

"தவிட்டு மூட்டை வர இரண்டு மணி ஆகும். அதுவும மழை நேரம், கூண்டுவண்டி பிடித்து மெதுவாகத்தான் வருவார்."

"வரட்டும்"

" இல்லே சாப்பிடலாம். "

முதன் முதலில் இருவர் குரலிலும் இருந்த நடுக்கம் சற்றுக் குறைந்தாலும், வார்த்தைகள் தடைபட்டே வந்தன. வார்த்தைகள் தெளிவாக இல்லாவிட்டாலும், பொருள்தான் மைதீட்டிய கண்போல் இருக்கின்றதே. வீணுகக் காலத்தை அவர் விரும்பாமல் கேட்டு விடுவது என்று தீர்மானித்தார். ஆனல் மனசில் நினைத்தது, சொல்லாக வெளிவர எத்தனை கஷ்டப்படுகிறது!

" கண்ணம்மா !"

அக்குரல் அவள் உடம்பிலே நெருப்புப் பந்தம் உராய்ந்தமாதிரி இருந்தது. கிருஷ்ணக்கோனர் திண்ணையில் காலைத்தொங்கவிட்டபடியே, மழையைப் பார்த்துக் கொண்டுதான் அப்படி ஆரம்பித்தார்.

புயல் ஆரம்பித்தது. பூசலும் எழுந்துவிட்டது! உணர்ச்சிக்கு வசப்பட்டு உன்மத்தன் ஆகிவிட்டால்! அவள் கற்பனை கிளைவிட ஆரம்பிக்கவே, தன்னையும் காப்பாற்ற வேண்டும்; ரஸாபாஸம் நேராதபடி நடக்கவேண்டும்; வாழ்வும் கசந்துவிடக்கூடாது; கட்டிய புருஷன் கல்மிஷம் கொண்டுவிட்டால், போச்சு. அவள் தலை சுற்றியது; வியர்வை, புழுக்கம் கண்மங்க ஆரம்பிக்கவே, " வஞ்சம் தீர்க்கவா போகிறீர்கள்? வேண்டாம் வேண்டாம்" என்று கெஞ்சினுள்.

அவள் அழுத கண்ணீரும், துக்கந்தோய்ந்த முகமுமாய்ப் பின்னல் இருப்பதைக் குரல் மூலம் அறிந்தாலும் திரும்பிப்பார்க்கும் எண்ணம் எழாமற்போகவே, கிருஷ்ணன் " ஆமாம்; வஞ்சந்தீர்க்கவே போகிறேன் " என்ருர் வெறும் ஆகாயத்தைப் பார்த்தபடி. மேலே வான வளையத்

தில். பெரிய கழுகை, ஒரு கருக்குருவி விரட்டிச் சென்றது. அதைப்போலத் தன் பலத்தையெல்லாம், கரிச்சான் போன்ற அவள் விரட்டிப் பார்த்தாள். ஆனால் அது மூன்று நாலு வருஷத்திற்கு முன்பு. பார்வை பருந்தையும் கரிச்சானையும் நோக்கிக் கவிழ்ந்தது. என்ன வேகத்தோடும், ஆத்திரத்தோடும் சாடுகிறது, இப்படிக் கண்ணம்மாளும் சாடிவிடுவாளோ?

பார்க்கலாம்! தூங்கிக்கிடந்த உணர்ச்சிகள் மறந்துப் போன சுழிப்புகள் மீண்டும் உடம்பிலே கொப்புளிக்க ஆரம்பித்தன. அவர் உடம்பிலே பழைய ஊக்கம், பழைய கலகலப்பு ரத்த நாளங்களிலே துடிதுடித்தன.

"உன்னுடைய வாழ்வைப் பாழ்படுத்தவே போகிறேன்."

அவள் செவியில், ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவது போன்ற உணர்ச்சி; வீட்டுக்குள் இருந்தவள் கதவு நிலையைப் பிடித்து, "ஐயோ, நான் அபலை; என் வாழ்வை நீங்கள் கெடுத்துவிடாதீர்கள். ஆண் பிள்ளைகள் போலவா பெண். வேண்டாம் கோடிப் புண்ணியம் உண்டு என்று கண்ணீர் சோரச் சொன்னாள்.

கிருஷ்ணன் அப்படியும் திரும்பினாரா? அல்ல. வெளியேவானத்திலே, அவர் கண் பதிந்திருந்தது. அவள் முகத்தைப் பார்த்தால் முன்னைப் பழங்கதையாகி, மனம் இளகிவிடும். சாணைபிடித்துக் கூர்மைபடுத்துகிறவர்போல, மனவாளை உறுதிப்படுத்தினார்.

" நான் வஞ்சிக்கவில்லை!"

"தெரியும் உன் சாகஸம். என்னை இரு முறையும் ஏமாற்றினாய். உன்னைப் பற்றி ஏதும் பேச்சு வாராதிருக்க என்னை சித்தி வீட்டு எருத்துப்பிறையில் சந்தித்தாய்"

"ஆமாம்."

பிறகு, நான் ஊருக்குப் புறப்பட்டு வந்தபோது அதி காலையில், பனி வடலி விளையில் சந்தித்தாய்.

"ஆமாம். என்மனம் உண்மையில் உங்கள் பேரில் இருந்தது."

"பொய்."

"உண்மை. பிறகு அம்மா, என்னை என் மாமன் வீட்டுக்கு அழைத்துப் போய் என் எண்ணத்திற்கும் மனசிற்கும், ப்பேச்சுக்கும் எதிராகக் கலியாணத்தை முடித்துவிட்டாள்."

"உன் நாடகத்திற்குத் தாயைக் குறை சொல்லாதே!"

"என் வாழ்வு—கலியாணத்தோடு போய்விட்டது. சொன்னால் நம்புங்கள்; அவருடைய மனம் புண்படும்; அவர் வாழ்வு சிரிப்புக்கு இடமாகும்."

"உன்னால் வந்த வாழ்வுதானே கண்ணம்மா; உன்னால் தாழ்வு வரும்போது ஏன் தயங்கவேண்டும்?"

"உங்கள் சேக்காளி அல்லவா."

"உன்னை நடுத்தெருவில் நிற்க வைக்கவேண்டும்; எனக்கு அவனைப்பற்றி கவலையில்லை."

"அந்த அவமானம் என்னோடு நிற்காமல், நிழல்போல் அவருக்கும் வரும்."

“ அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. ”

“ ஐயோ. கையெடுத்துக் கும்புடுகிறேன். வேண்டாம், பழிபாவம்.”

“ விமோசனம் ? பழிக்குப்பழி வாங்கவேண்டாமா ?”

“ என்னை சந்திக்கவேயில்லை யென்று மறந்து விடுங்கள். ”

“ காந்தம் இருப்பதை இரும்பு மறக்கலாம் ; காந்தம் மறப்பதில்லை ! நீ மறந்தாலும், நான் ?”

சிறு குழந்தைபோல விம்மி விம்மி அழுதாள்; அவளை விட வானம் இன்னும் அழுதுவடிந்து கொண்டிருந்தது. பசுவைக் காணாத கன்று ஒன்று “ அம்மா ” வென அலறிற்று. அது கதறிய பிறகுதான், உள்ளே அடுக்களையில் பிள்ளை இருந்த நினைப்புவந்தது. ஓடிப் பார்த்த போது, தோசைகளை யெல்லாம் தூக்கிப் பக்கத்திலுள்ள தண்ணீர் அண்டாவிற்குள் போட்டுப் பையன் மாணிக்கம் சிரித்துக்கொண்டிருந்தான். அடுப்பிலே ஊற்றியிருந்த தோசை கருகித் தீய்ந்து கரித்துண்டாகப் போய்விட்டது அவள் மனம்போல.

“ டேய் டேய் என்னடா இப்படி ?’ ' என்று கத்திக் கொண்டே, அவனைத் தண்ணீரை விட்டு அப்புறப்படுத்தினாள். நல்ல வேளையாக இன்னும் சிறிது தோசை மாவு இருந்தது. அதுவும் அவள் பட்டினி இருந்தால் நண்பர்கள் இருவரும் சாப்பிடக்கூடும். மீண்டும் தோசை சுடவோ, அடுப்பு வேலைகளைப் பார்க்கவோ மனம் ஈடுபாடு கொள்ளாமல் வாசற்படியில் தலைமேல் கையாக உட்கார்ந்தாள். விசனம் அவளை ஆட்கொண்டது.

வீட்டுக்குள் நிழலாட்டம் தெரியவே அங்கே திண்ணையிலிருந்து கிருஷ்ணன் வீட்டுக்குள்ளாக வருவது தெரிந்தது. அவள் விஷப்பாம்பைக் கண்டவள் போல மிரள மிரள விழித்தாள்.

"பயப்படாதே. கண்ணு. நீ வேறு எவனுடைய மனைவியாக இருந்தாலும் இவ்வளவு நேரத்திற்குள் நீ நீயாக இருக்கமுடியாது. உன் ஏமாற்று வித்தைகள் அறிவேன்."

"இருமுறை மன்னித்தீர்கள். இது மூன்றும்முறை." என்று கண்ணீர் மல்கக்கரங் குவித்தாள்.

"உன்னைக் கெடுக்க நான் மிருகமல்ல; உன் வயிரை. சந்தோஷத்தை வதைக்கும் மனிதன் நான்" எக்காள மாகச் சிரித்தசமயம், வானத்து மின்னலொன்று வீட்டுக் குள் நெளிந்து ஒளிதந்து சென்றது. அந்த ஒளியிலே, கிருஷ்ணன் முகத்திலே இலங்கியப் பரிகாசப் பார்வை, கண்ணிலே ஜொலித்த உறுதி மனப்பான்மை கண்டாள், அடிப்பட்ட மான்போலத் துவண்டு, உயிருக்கு ஊசலாடும் நிலையைக் கிருஷ்ணக் கோனர் கண்டார். இளமறி யொன்று நடக்கமுடியாமல் தவிப்பதை அவர் அடிக்கடிப் பார்த்துத் தன் தோளிலே தூக்கிவந்த சம்பவங்கள் வந்தன. அப்படித்தான் அவள் பார்வையின் கொஞ்சல் இருந்தது. அது வேஷம என்ற உணர்ச்சியல்லவா அவருக்கு மீண்டும் தோன்றுகிறது!

விவரங்கள் ஏதும் அறியாத குழந்தை, தாயின் அழுகையைப் பார்த்துச் சுவரில் சாய்ந்தபடியே கூர்ந்து கவனிக்கிறது. அடிக்கொருதரம் வாசலில் நிற்கும் நபரையும் கண்ணோட்டம் கொடுக்கிறது; அதற்குப்

புரியாத புதிர். ஏதோ ஆவேசம் வந்தவர் போலக், "கண்ணம்மா நீ பிழைத்தாய்" என்று வாசற்படியை விட்டு மீண்டும் திண்ணையில் போய் உட்கார்ந்தார்.

புயல் ஓய்ந்தாலும், அதன் வேகம் இன்னும் குமுறிக் கொண்டிருக்கிறது. இதை நன்கு உணர்ந்தாள். அவள் பேசவும் முடியவில்லை. இந்த நெருக்கடியான கட்டத்திலே வாசலில் வண்டி சத்தம் கேட்டது. விழிப்புக்கொண்ட கண்ணம்மா அடுப்பில் விறகை ஏறத்தள்ளி, முகத்தையும் துடைத்துக் கொண்டாள். வானம், திடீரென வெளி வாங்குகிற மாதிரி முகக்களையை மாற்றிவிட்டாள். அடுப்புப் புகைந்தது. கனல் மூண்டது.

திண்ணையின் பக்கம் தவிட்டு மூட்டைகள் அடுக்கும் ஓசை; தொடர்ந்து புருஷனும், கிருஷ்ணனும் பேசும் குரல்கள்.

"சாப்பாடு ஆச்சா?"

"ஓ ஆச்சுது"

உனக்காக ஒரு காரியம் பார்த்திருக்கிறேன்.

சுவாரஸ்யமில்லாமல், "என்ன?" என்றார் கிருஷ்ணன்.

"ஒரு பெண் பார்த்திருக்கிறேன்."

"தவிட்டு மூட்டையோடு பெண்ணையும் கொடுத்தார்களோ?"

நல்ல இடம். நீ கல்யாணம் காட்சி செய்துகொண்டு, இங்கேயே இருந்துவிடு. நாம இரண்டுபேரும் கூட்டு வியாபாரம் செய்யலாம்."

நண்பன் உத்சாக மின்றி இருந்ததால், விஷயம் என்னவெனப் புரியவில்லை. முகத்திலும் களையில்லாமற் போகவே "ஏன், உனக்கு ஏதாவது உடம்பு கிடம்பு" என்று சொல்லி, அருகாக வந்து நெற்றியில் கைவைத்த சமயம் கொதித்துக் கொண்டிருந்தது.

"என்ன ஜுரம் அடிக்குது ?"

"ஒண்ணுமில்லே தலை வலி !"

"தலை வலியின்னு சொல்லக் கூடாது. ஏய் கண்ணு; சுக்குப்பத்து கொண்டுவா. ரெண்டு கிராம்பையுங்கூட இழைச்சுக்கோ."

தலைவலியின் காரணத்தை சொல்ல முடியுமோ? அதுவும் பொய் சொல்லியாகிவிட்டது.

"இல்லேப்பா, சந்தனம் நான் ஊருக்குப் போகணும்."

"ஏனப்பா. உனக்கு எங்க வீடு பிடிக்கலையா ?"

"போகணும்."

"நான் முதலில் சாப்பிட்டு வருகிறேன்; பிறகு பேசிக்கிறேன்" என்று வண்டிக்காரனுக்கு கூலியைக் கொடுத்து விட்டுப் போனார் சந்தனக் கோனார்.

உள்ளே வந்தவர், "தலையைக் காலை வலிக்கிறது, என்று பார்த்தவுடன் எனக்குத் தெரிந்ததே. நீ கொஞ்சம் சுக்கும் கிராம்பும் அறைத்துக் கொடுக்கக் கூடாது ?" என்று கேட்டுக்கொண்டே வரவும், "கொடுக்கிறேன்" என்றாள் கண்ணம்மா. மழலைப் பேசிக்கொண்டு சுவரில் சாய்ந்துநின்றவன், "அம்மா அயுது" என்று கண்ணைக் கசக்கிக் காட்டினான் மாணிக்கம்.

"ஏண்டா, பயலே இந்த அடுப்பிலேயே இருந்தா சிரிக்கவா செய்யறது? புகைதான் மண்டலம் மண்டல மாக" என்று சமாளித்துப் பையனை வந்து தூக்கிக் கொண்டாள். தத்துப் பித்தென உளறிக் கொட்டிப் புகைச்சலுக்கு வழி பிறந்து விடக்கூடாதே யென்று பயம்.

"நீங்க சாப்பிடலாமே"

"உம் எடுத்துவை"

சந்தனக் கோனார் சாப்பிட உட்கார்ந்த சமயம், பையன் கையிலே பெரிய வெல்லக் கட்டியைத் தூக்கிக் கொடுத் தாள், பயலுக்கு பேச்சு வரக்கூடாது; வந்தாலும் வாய் நிறைய எச்சலோடு 'சளாபுளாவாகப்' போய்விடுமல்லவா?

"கிருஷ்ணு. ஒரு தம்ளர் காப்பி குடிக்கலாம் உள்ளே வா."

கிருஷ்ணன் அங்கே இருந்தால் அல்லவா; அவர் தான் பீடி குடிப்பதற்காக, அங்கிருந்துபோய் விட்டாரே.

"வெளிய பாரு அவனை."

கண்ணம்மா திண்ணைப் பக்கம் பார்த்து விட்டு "காணோமே" என்றாள்.

"சரி சரி நீ சுக்கு உரைத்தாச்சா?" என்றார்.

"உரைக்கிறேன்." என்று சந்தனக் கல்லில் இழைக்க ஆரம்பித்தாள்.

"நாங்கூட அம்மா வீட்டுக்குப் போய் வரணும்!" என்று அவள் ஆரம்பிக்கவே, "அங்கே என்னவாம் இப்போ? என்று எடுத்த எடுப்பிலேயே வள்ளென விழுந்தார்.

"மாமனுக்கு உடம்பு சாயில்லேன்னு லட்டர் வந்துதே!"

"எல்லாம் சரியாகப் போகும். ஒரு ஆளுக்கு ரெண்டாள், சாப்பாட்டுக்கு எங்கே போக?"

"நான் போய் பார்த்திட்டு நாலு நாளுலே வந்திடுவேன்."

"இப்போ முடியாது. வீட்டுக்கு விருந்தாளியைக் கூட்டி வந்திட்டு, நீ பாட்டுக்கு மாமன் ஊருக்குப் போய் விட்டால் அவன் என்ன நினைப்பான்?"

"அதைப்பத்தி யாருக்கென்ன? நான் போகணும்."

"நீ போகிறதை நானும் பார்த்துப் போடுகிறேன்." என்று கோபமாகப் பேசிவிட்டு எழுந்தார் சந்தனம். அவள் காப்பி கொண்டு வந்து கொடுத்தபோது, "நீயும் உன் மூஞ்சியையும்; உயிருக்குயிரான சினேகிதன் வந்து தங்கி நாலுநாள் ஆகலே. அது பொறுக்கமுடியாமல் ஊருக்குப் போகணுமாம். முகரக்கட்டையைப் பாருங்க!" என்று எரிந்து விழுந்தார். கோபமாகக் காப்பித் தம்ளரைக் கீழே வைக்க, அது தவறிக் காப்பிக் கொட்டிவிட்டது.

"என்ன அடம்? அவன் சாப்பிடுகிறது உனக்குப் பிடிக்கலேயா?"

"இல்லாததும் பொல்லாததும் போதும்." அவள் மனசை அவர் புரிய முடியுமா? தான் அங்கிருந்து சில நாள் போய்விட்டால், கிருஷ்ணன் போய் விடுவார். எவ்வித மனத்தாங்கலும் எழாமல் குடும்பத் தேர் சுகமாக நிலைத்துவிடும்; அதற்காகத்தான் அவள் மாமனைப் பார்க்க அவசரப்படுவதாக ஒரு பொய் சொன்னாள்.

சந்தனம், திண்ணைக்கு வந்து பார்க்கவும், கிருஷ்ணனைக் காணமற் போகவே, தெருவில் வந்து பார்த்தார். நட்பின் பாசம் ஒரு பக்கம். கிருஷ்ணன் பையிலுள்ள ரொக்கம் ஆயிரத்து முந்நூறும் தனக்கு பக்கபலமாக 'டைரி' வைக்கப் பயன்படும் என்ற நம்பிக்கை மறுபக்கம். அதனல், கிருஷ்ணன் சௌக்கியத்தில் அக்கரை கொண்டவராய்த் தேடிப் புறப்பட்டார். மழை பெய்த ஈரம் காயவில்லை; அந்த ஈரத்தில் எங்கே போயிருக்கலாம்?

பக்கத்திலே இருந்த வெற்றிலைப் பாக்குக் கடையைக் கடந்த சமயம், "அதோ ஓட்டலுக்குள்! என்ருர் கடைக்காரர் நாயர்.

கிருஷ்ணக் கோனர், அங்கே 'கரம் சாயா' குடித்துக் கொண்டிருந்தார். இது அவமானமாகப்பட்டது. கடைக்குள் போகாமல் வெளியே நின்றவர், தமதருகே வந்ததும் "ஏன் கிருஷ்ணு நீ வீட்டில் டீ போடச் சொல்லக் கூடாது?" என்ருர்.

"பரவாயில்லை. பீடி வாங்க வந்தேன். ஒரு சாயாவும் குடிக்க வேண்டும் போலிருந்தது."

"சாயாவுக்கு ஆறணு கொடுத்தாயே!"

"கொஞ்சம் பலகாரம்!" என உண்மையை ஒப்புக் கொள்ளவும் நேர்ந்தது.

"அப்போ நீ வீட்டில் காப்பி—பலகாரம் சாப்பிடவில்லை?"

"சாப்பிட்டேன்."

"பொய்"

"நிஜந்தான்"

"வயிற்றுக்கு வஞ்சனை செய்துவிட்டு, இங்கே வந்து சாப்பிடத்தானு, நீ என் வீட்டில் தங்குவது?" என்று நடுத்தெருவில் பேசிக்கொண்டே போனார்கள்.

அவருக்கு வஞ்சனை செய்யாதிருக்க, இங்கே ஓட்டலில் வந்து சாப்பிட்டதை அறிந்தால்தானே!

"எனக்கு உன்னுடைப் போக்குப் பிடிக்கவில்லை. அவள் தான் சங்கோஜியாக இருந்தால், நீ கேட்டு வாங்கிச் சாப்பிடக்கூடாதா?" என்று கடிந்து கொண்டார்.

"எனக்கு ஓட்டலிலேயே சாப்பிட்டுச்சாப்பிட்டு வீட்டுச் சாப்பாடு பிடிக்கவில்லை."

"எப்படிப் பிடிக்கும்? அதுவும் கண்ணம்மா உபசாரம் எந்த மனிதனுக்கும் அன்னத்துவேஷம் கொண்டு வரும்! நான் சொல்வதைக் கேள். இனிமேல் நீ ஓட்டலில் சாப்பிட்டால் என் மனம் பொறுக்காது. உன் வீடுமாதிரி; உனக்கு வேண்டியதைச் செய்யச் சொல்" என்று சொன்னார்.

எதையும் சரியாக மனசில் போட்டுக் கொள்ளாமல் "சரி சரி" யென்று தலையை ஆட்டிக் கொண்டு வந்தார் கிருஷ்ணன்.

இருவரும், திண்ணைக்கு வந்து உட்கார்ந்து பேச ஆரம்பித்தார்கள்.

"ஒளிப்பு மறைப்பு நமக்குள்ளே வேண்டாம்; மனசிலே எது இருந்தாலும் சொல்லு கிருஷ்ணு. ஏன் தெரியுமா? நான் இப்போது சில காரியம் சொல்லப் போறேன். ஒண்ணு நாம இரண்டு பேரும் கூட்டாகக் 'கிருஷ்ணு பால் 'டைரி' வைப்போம்; உன்னுடை ஆயிரத்து முந்நூறு ரூபாய் இருக்கு; அந்தத் தைரியம் உனக்கும் ஒரு பெண் பார்த்து

கல்யாணம் செய்து விடலாம், அப்பாலே அக்கம் பக்கமாக நம்மோட குடும்பம் இருக்கலாம். இது என் எண்ணம்; உன் எண்ணம் என்ன ?"

"உன் மனம் எப்படியோ அப்படிச் செய். ஆனால், இந்தக் கிருஷ்ணனை நம்பாதே; பொண் பேசாதே; கூட்டாக வியாபாரம் வேண்டாம். நான் குடும்பத்திலே கட்டுப் படாதவன். திடீர்னு ஒரு குணம் வந்தால், அறுத்ததாம் கழுதை எடுத்ததாம் ஓட்டம்."

இருவரும் அவரவர் மன வோட்டத்தைத் திறந்து சொல்லி விட்டார்கள். சந்தனக் கோனருக்கு நம்பிக்கை இருந்தது. கிருஷ்ணன் மனதை மாற்றிவிடலாம், மனம் மாறும் என்று நம்பினர்.

அன்றைய மத்யானச் சாப்பாடு மௌனமாக நடை பெற்றது.

மாலை பால் கறவையும் வியாபாரமும் நடந்தது. இரவு சாப்பிட்டுவிட்டு திண்ணையில் விரிப்புப் போடவே, கிருஷ்ணன் படுத்தார். அவருக்கு இமை மூடவில்லை. காலைச் சம்பவம், வருங்காலக் கூட்டு வியாபாரம், 'கிருஷ்ணன் பால் 'டைரி' என்று சொல்லிப் பார்த்து ஒரு முறை சிரிப்பு, இப்படிப் பலவித மன உளைச்சல்கள், முடிவில், மனிதன் சூழ் நிலையில் தேவனுகவும் மிருகமாகவும் மாறுகிறவன். அதனுல் சூழ் நிலையை மாற்றித்தான் மனிதனுக வாழ முயற்சி செய்யத் திட்டமிட்டார்.

வானத்து நட்சத்திரங்கள் போல, அவர் கைக்கு எட்டாமற் போய்விட்ட கண்ணம்மாவை, இரவு நேரத்தில் மறந்து அடிக்கடி முற்றத்தில் அங்குமிங்கும் உலாவினர்.

காலைக்கோழி கூவிற்று. மணி மூன்று. சந்தனக் கோனார் புரண்டு படுத்தார். இன்னும் ஒரு கண் தூங்க நினைப்பு. தூங்கினார். சுருட்டி வாரிக்கொண்டு, "கண்ணு கண்ணூஊ" என்றார். அன்று அதிகாலையில் பால்கொண்டு வருவதாகச் சொல்லியிருந்தார், ஒரு கலியாண வீட்டுக்கு. பக்கத்துப் பாய் சுருட்டாமல் கிடந்தது.

பாத்திர பண்டங்கள் விளக்கிக் கொண்டிருக்கலாம்; பின் பக்கம் வந்தார்; பால் சொம்புகள் அப்படியே கிடந்தன. மோர் பானையின் அருகாக ஏமாந்த பூனையொன்று படுத்துக் கிடந்தது, இவர் வரவே எழுந்தோடிற்று. பின் பக்கத்து தோட்டத்தில் நின்று "கண்ணு கண்ணூஊ" என்றார். அவள் அரவம் இல்லை மீண்டும் வீட்டுக்குள் வந்து தொட்டிலைப் பார்த்தார்.

அவர் நெஞ்சு திக்கென்றது. பிள்ளையுடன் எங்கே போய்விட்டாள். பின் கதவு திறந்து கிடக்கிறது. முன் பக்கத்துக் கதவை வந்து திறந்தார். வெளியே திண்ணையில் படுக்கை மட்டும் சுருண்டு கிடந்தது. அங்கே கிருஷ்ணக் கோனார் இல்லை!

உள்ளே ஆசை மனைவியில்லை; வெளியே திண்ணையில் உயிருக்குயிரான நண்பனைக் காணோம்!

அவர் மூளை முடிச்சுப் போட்டது! நெஞ்சில் கனல் மூண்டது, அவர் புருஷன்; புருஷனுக்குள்ள புத்திசாலித் தனம் தலைதூக்கிற்று.

அவர்கள் ஓடி விட்டார்கள்!

கண்ணம்மாவின் குழம்பியமனத்தில் பற்பல எண்ணங்கள்; தூங்கி வழிந்த குழந்தையை எடுத்து மார்போடு

சாத்திக் கொண்டாள்; புருஷன் இன்னும் தூங்குகிருன். பூனை போல நடந்து பின் வாசற் கதவைத் திறந்தாள். எவ்வளவு நடுக்கம். எங்கும் இருள் பம்மிக் கிடந்தது. பின் பக்கத்துத் தோட்டத்தில் நின்ற பூவரச மரத்தின் மேல் பேய் தன் கால்களைப் பரப்பிக் கூத்தாடுவது போன்ற தோற்றம். மனப்பேய் என்று ஒருவித தைரியம். மெல்லிய காலை நேரத்துச் சில்லென்ற காற்று இழைய, அவள் நடுங்கிய உடல், இன்னும் சிலிர்த்தது.

தொலைவில் ஒரு சேவல்; காலைப் பொழுதைக் கணக் கிட்டு அலறிற்று. மணி மூன்று. இருள் தன்னை விழுங்கி விட்டது போன்ற பிரேமை. அவள் மெதுவாக நடந்தாள்.

கிருஷ்ணன் தூக்கம்வராமல் யோசனைகளின் புகைக் குமைப்பில் மனங் கலங்கி இரவு வெகு நேரம் நிம்மதியின் றிப் புரண்டு படுத்தவர், ஒரு முடிவுக்கு வந்தார்.

அந்த முடிவை, அவருக்கு முன்னதாகக் கண்ணம்மா காரியத்தில் நடத்திவிட்டாள். அவர் எழுந்து வீட்டை விட்டு வெளியேற நினைத்த சில விநாடிகளுக்கு முன்ன தாகக் காலடி ஓசைக் கேட்டது, முடுக்கு வழியாக ஓர் உருவம் தம்மைத் தாண்டிப் போவதைப் பார்த்தார். முற் றத்திலே குடுகுடுவெனப் போகும் வேகத்தைக் கவனித் தார்.

அது யார்? கூர்ந்து கவனித்தார். கண்ணம்மா!

ஏன் அவள் போகிருள். எங்கே? ஒரு வேளை புருஷன் கோபித்துக் கொண்டானே? தானும் பிள்ளையுமாகத் தற் கொலை செய்து கொள்ளப் போகிருளா? இரு உயிர்கள் தன்னால் சாகவேண்டுமா?

கிருஷ்ணன் படுக்கையை சுருட்டித் தள்ளிப் பின்னால் போனார், கண்ணம்மா, தெருவைக் கடந்து 'மெயின் ரோடு' வந்து விட்டாள். வீதியில் மின்சார விளக்குகள் எரிந்தன. அவள் வேகம், அவரால் பின்பற்ற முடியாதபடி இருந்தது. பட்டணத்துக் காலைச் சந்தடிகள் அங்கங்கே விழித்துக் கொண்டன.

அதிக இருட்டும் ஒளியும் இல்லாத அவளுக்கு முன்ன தாக வந்து நின்றார் கிருஷ்ணன். அவள் திடுக்கிட்டாள்.

"அடப்பாவி நீயா ?"

"நான் பாவியில்லே. எங்கே இந்த ஓட்டம் ஓடுகிறாய் ? ஆறு குளத்திலே விழுந்து விடவா ?"

"இல்லை ரயிலுக்கு நேரமாகி விட்டது." 'அவருக்குத் தெரியாது. நான் சொல்லாமல் வந்து விட்டேன்.'

"எதனால் ?"

"வீட்டில் என்னால் இருக்க முடியவில்லை"

"நான் இருப்பதனால், உனக்குப் பயம். அப்படித் தானே. நான், இனி உன் வீட்டுவாசலை மிதிக்கமாட்டேன். மரியாதையோடு வீட்டுக்குப் போய்ச் சேர்."

"நீ ?"

"நான் வந்த சுவடு தெரியாதமாதிரி போய் விடுவேன், நான் செய்ய இருந்த காரியத்தை நீ முந்திக் கொண்டு செய்து விட்டாய்:"

"நான் அம்பா சமுத்திரம் போகிறேன். என் மாமனைப் பார்த்து விட்டு வர."

"நாளைக்குப் போ. நானும் கிளம்பி விட்டேன், நீயும் புறப்பட்டால்?"

"நான் இனி வீட்டுக்குப் போக முடியாது. ரயிலுக்கு நேரம் ஆகிவிட்டது; நாலரை வண்டியில் புறப்படப் போகிறேன்."

"வீட்டுக்குப் போக மாட்டாய்?"

"நாலு நாளில் திரும்பி வந்து விடுவேன்."

"நானும் இல்லை; நீயும் வீட்டில் இல்லை. சந்தனம்......" சுயநலம் போய் அன்பு கனிந்தது அவர் இதயத்தில்.

"அவர் என்ன நினைத்தாலும் சரி;" அவர் பதிலை எதிர்பாராமல் 'விர்' என குழந்தையைத் தோளில் சாத்திய படி நடந்தாள்; ஓட்டமும் நடையுமாக, ரயில்வேஸ்டேஷன் பக்கமாகத் திரும்பினாள்.

சற்று நேரம் சென்ற பிறகு, கிருஷ்ணன் எவ்வித நோக்கமுமின்றி எதிர் திசையில் கால் போன போக்கில் நடந்தார்.

"நாலு நாளில் திரும்பிவிடுவேன்" இதைச் சொல்லிப் பார்த்தார்.

ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாக இருந்த சந்தனக் கோனாருக்கு நிலை கொள்ளுமா? தாமே பால் சொம்பை அவசரமாக விளக்கிப் பால் கறந்தார். கல்யாண வீட்டுக்குத் தூக்கிச் செல்ல இருந்த சமயம், உதவிக்கு இருந்த வேலையாள் வரவே, அவன தலையில் சுமத்தி விட்டுத் தலையை அழுத்திப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டார். யோசனை தாக்கவே, வெறியனைப் போலப் பெட்டியைத் திறந்து பார்த்தார். கிருஷ்ணன் கொடுத்திருந்த

பணப்பை முடிப்புக் கலேயாமல் ரூபாய் ஆயிரத்து முந்நூறு அப்படியே இருக்கிறது. என்ன ஆச்சரியம். பணமல்ல, அவள்தான் முக்கியம்.

ஓடிப்போனுல் பணத்தை எடுத்துக்கொண்டு ஓட வில்லே—இப்படியும் ஒரு சமாதானம். கறவை மாடுகள் மறுபடியும் கத்தின. கன்றுகளின் குரல் அவருக்கு "ஓடிவிட்டார்கள்; ஓடிவிட்டார்கள்" என்ற ஒலி பெருக்கின. அப்படிப் பிரமை: எழுந்து மாடு கன்றுகளை நாலுசாத்துச் சாத்திஞர்.

"ஏன் தம்பி சந்தனம் அப்படி அடிக்கிறே?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள், தன் பெண்ணைக் கிருஷ்ணக் கோனுருக்குக் கொடுக்க இருந்தவள். ஏதோ ஒரு பொய் அடித்ததற்கு இட்டுக் கட்டினர்.

"எங்கே கண்ணம்மா. இன்னும் சாணி தெளிக்காம தூங்குதா?"

இல்லே. காலே ரயிலுக்கு அம்பா சமுத்திரம் போயி ருக்கு. மாமனுக்கு உடம்பு சரியில்லேயாம்." கஷ்டத்திலும் இப்படி ஒரு பொய் சிருஷ்டிக்க முனேந்ததை நினேத்துச் சந்தோஷப்பட்டார்.

"பொண்ணேப் பார்க்க வரலாம். ராவு என் தம்பிகூட வந்திருக்கு; அதனுலே பேசியே முடிக்கலாம். எந்தம்பி கிட்டே சொன்னேன். 'சந்தனம்' சொன்ன சரியக்கான்னு சொல்லுச்சு தம்பி. அவரு எங்கே?"

மற்றொரு பொய்க்கு சந்தர்ப்பம் வாய்ந்தது.

"இன்னிக்கு அரசங்குளம் சந்தையாம்; தான் போய் விட்டு வந்துவிடுவதாகச் சொன்னுன் கிருஷ்ணன்.

கிருஷ்ணன்வந்ததும் நானே வருகிறேம்மா; வந்து தகவல் கொடுக்கிறேன்."

"பாவம், கண்ணம்மா மாமனுக்கு என்ன உடம்புக்கு?" என்று துளைத்துத் துளைத்துக்கேட்டாள். அவள் வந்ததும் பேசுவதும் பிடிக்காமற் போனாலும் தள்ள முடியாமற் அவதிப்பட்டார் சந்தனம்.

"காலை ரயிலுக்கு நீங்கதான் கொண்டுபோய் ஏற்றி விட்டு வந்ததா?"

"ஆமாம்" என்றார் வாய்விட்டு. வந்தவள் பாத்திர பண்டங்களை விளக்கி, நாலு குடம் தண்ணீர் நிரப்பினாள். சந்தனக்கோனார், சரியான மருமகனைப் பிடித்துத் தந்து விட்டார் என்ற சந்தோஷப் பெருக்கில் அந்த அம்மாள் வீட்டைச் சுத்தம் செய்தாள். அதுவரை சந்தனத்துக்கு அனுகூலம்.

"அம்மா; நீங்களே வீட்டைப் பார்த்துக்கிடுங்க நான் அடுத்த ரயிலுக்கு அம்பா சமுத்திரம் போயி, அவள் மாமனைப் பார்த்துவிட்டு வருகிறேன். வேலைக்கார பயல் வந்தால், எல்லா விபரமும் சொல்லுவான்; கவனித்துக் கொள்ளுங்கள்."

அந்த அம்மாளும் வீடுவரை போய், தன் தம்பியிடம் விஷயத்தை சொல்லிவிட்டு ஒரு நொடியில் வருவதாய் போனாள். பணம் காசு, நகை நட்டுகளைப் பத்திரமாகப பெட்டிகளில் வைத்துப் பூட்டிக்கொண்டார்.

ஏழுமணி ரயிலைப் பார்க்க, அவர் ரயில்வே ஸ்டேஷனை அடைந்தார்.

கை இறங்கிவிட்டது.

மகளைப் பார்ப்பதில் தாய்க்கு எப்போதும் சந்தோஷம் உண்டு; ஆனால் உடுத்திய துணியோடு, துக்கம் தோய்ந்த முகத்தோடு வருவதைக் கண்டால், எப்படி இருக்கும். மகள் புருஷனோடு வீட்டில் கோபித்துக்கொண்டு வந்து விட்டதாக வெள்ளையம்மா எண்ணினாள்; அவளை என்ன விஷயம் என்று துருவித் துருவி விசாரித்தாள் தாய். "மாமன் உடம்பைப் பார்க்க வந்தேன், அம்மா" என்ற பதிலைச் சொன்னால் நம்ப முடியுமா? குளித்து முழுகிச் சாப்பிட்ட பின்பு விசாரித்துக் கொள்ளலாம் என்று நினைத்த சமயம், இரண்டு மூன்று மணி நேரத்தில் மருமகன் சந்தனக் கோனாரும் அங்கு வரவே, தாய்க்குத் ...ல் அடித்தது.

மருமகனை எவ்விதக் கிலேசமுமின்றி அதிகப்படியான அன்போடு உபசரித்தாள்; அவரோ, வழக்கத்திற்கு மாறான வாத்ஸல்யத்தோடு பேசினார். மகள் கோபித்துக் கொண்டு வந்தவளல்ல என்ற முறையில், "நான்தான் கண்ணுவை அனுப்பி வைத்தேன். காலை ரயிலுக்கு வந்தாள். நாமும பார்த்துப் போவோம் என்று வந்தேன். சித்தப்பாவுக்கு உடம்பு எப்படி இருக்கிறது?" ஏன் சித்தப்பா, உடல் சௌக்கியமா?" என்று அன்பையும் அனுதாபத்தையும் சமமெனடை விரவியேபேசினார், தனிமையில் மனைவியைக் கண்டு எதுவும் பேசவோ, அவளிடம் வாய் வார்த்தையோ முகக்கோணலோ காட்டவில்லை. தாம் எதிர் பார்த்ததற்கு எதிரிடையாக அவள் அங்கே இருக்கவே, அவர் முதலில் ஏமாந்து போனார். கிருஷ்ணனுடன் ஓடிப்போயிருக்க வேண்டும் என்ற தீர்மானத்தில் வந்தவர், மாமன் வீட்டில் அவள் இருக்கவே ஏமாற்றம் அடைந்தார்.

ஆனாலும் சந்தேகம் இதயத்தின் ஒரு மூலையில் அரித்துக்கொண்டிருந்தது. மாமியார், "அங்கே மாடு கன்றுகள் நல்லா இருக்குதா? வியாபாரம் எப்படி நடக்கிறது?" என்றபோது, உளவறியும் எண்ணத்தோடு, "என்னோடே சேக்காளி கிருஷ்ணன் கிருஷ்ணன் என்று ஒருவன் உங்கள் மதவக்குறிச்சியிலே அவன் சித்தி வீடு..............." என மேலே சொல்லு முன்பாக, மாமியார், "அடப்பாவி அவன் அங்கே ஏன் வந்தான்!" என்று திடீரெனச் சொல்லி விட்டாள். கிருஷ்ணன் பெயரைச் சொன்ன மாத்திரத்தில் அவள் முகம் பாம்பை மிதித்தவள் போல பயப்படுவதை உணர்ந்தார் சந்தனம். பிறகு சமாளித்துக் கொண்டாலும் அவளுடைய பயம், மருமகனுக்குப் புரிந்துவிட்டது. இதில் 'ஏதோ சூது' இருக்கிறது என்ற வரை விரைந்து விடவே "ரொம்ப நல்லவன். நாங்கள் ரெண்டுபேரும் கூட்டாக பால் பண்ணை வைக்கப்போகிறோம். மாமன் உடம்பு சரியாகி, இங்கே நாலுநாள் இருந்து வரட்டும் கண்ணு; நான் அடுத்த ரயிலுக்குப் போகிறேன்" என்றார்.

"இருந்து போகலாமே."

"மாடு கன்றுகள் கழுதையாகப் போகும். உங்களுக்குத் தெரியாதா, பால்காரன், வீட்டில் ஒருமணி இல்லாவிட்டால் எவ்வளவு சிரமம். இன்னும் அரை மணியில் ஒரு வண்டி பேட்டைக்கு இருக்கிறது" என்று புறப்படவும் சித்தமானார்.

கண்ணம்மாள் தன் புருஷன் தேடிக்கொண்டு வரக்கூடும் என்பதை எதிர் பார்த்தவளா? அவர் மனசில் சந்தேகம் விழுந்துவிட்டது. தான் ஓடிப்போனது எங்கே என்பதை நோட்டமிடவே வந்ததாக யூகித்தாள். அப்படி

யானல் கிருஷ்ணன் போய் விட்டாரா? அதைத் தெரிந்து கொண்டால் தானும் கூடவே கிளம்பத் தயாராக இருந்தாள்.

மிகவும் கஷ்டத்தோடு, "நானும் உடனே வரவேண்டுமா?" என்று கேட்டாள்.

அதுவரை சிரித்துப் பேசிக்கொண்டிருந்தவர், "யாரிடம் கேட்டுக்கொண்டு வந்தாயோ, அவரிடமே திரும்பவும், உத்தரவு பெற்றுக்கொண்டு வா," என்று கடுமையாகச் சொல்லிவிட்டு வெளியே போய்விட்டார்.

மகள் உத்தரவு பெருமல் வந்திருந்த விபரம் தெரிந்தது. "என்னடி இப்படித் தறுதலை மாதிரி வந்தே?" என்ருள். இதற்குள், மருமகன் வீதியைக் கடந்து கோபமாக விசுக் விசுக்கென நடப்பதைப் பார்த்தாள். கண்ணம்மாவுக்குப் பேச்சை விட அழுகை துடிப்பாக வந்தது. குழந்தைபோல முகத்தைப் புதைத்தாள். விம்மினள் கோவென கதறி விட்டாள்.

"என்னடட்டி, என்ன?"

"ஒண்ணுமில்லே.'

"இந்த பாரு; தாய்கிட்டே எதையும் ஒளிக்காமச் சொல்லு."

தயங்கித்தயங்கி நடந்த விபரங்களை சொல்லி முடித்தாள்.

"அப்படியா? அந்தப் பாவி முடிவான் அங்கே ஏன் வந்தான்?"

"உன் மருமகனுக்கு ஆதி சிநேகிதமாம்."

"சரி. அவன இருக்கிருனு போய்விட்டானு?

"போயிருக்கணும்."

"நீ நாசமாப் போக. வீட்டை விட்டு ஏன் வந்தே? ஒரு பெண் வீட்டு நடையை விட்டு இறங்கி விட்டா, புருஷன் உத்திரவு இல்லாம மறுபடியும் தன் வீட்டுக்குள்ளே போக முடியுமா?"

"என்னைப் போல அவரும் ராவோட ராவா வீட்டை விட்டுப் போகப் போவதை நானு கண்டேன்?"

"உம் புத்தியைப் செருப்பாலே அடிக்கணும். நான் இந்தமாதிரி வம்பு தும்பு வருமின்னு யோசிச்சேகண்காணு ஊருக்கு வந்து, உன்னைக் கட்டிக் கொடுத்தேன். இப்போ எதை தடுக்க நினைச்சேனே, அதுவே நடந்துபோச்சு.' என்று மாலைமாலையாகக் கண்ணீர் உகுத்தாள். தாயும் மகளும் உணர்ச்சி வெள்ளத்தில் மிதந்தார்கள். நோயாளிக்கு இந்த சம்பவங்கள் எதுவுமே தெரியாதபடி,வழக்கத்தைவிட அதிக உத்சாகமாக சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஒருநாள், "தம்பீ உன் உடம்பைப் பார்த்துக்கோ பக்கத்து வீட்டம்மா கஞ்சி கிஞ்சி வைச்சித்தரும்; சொல்லி இருக்கேன். நம்ம கண்ணுவைக் கொண்டுபோய் பேட்டையில் விட்டுவிட்டு வந்துவிடுகிறேன்" என்று நோயாளித் தம்பியிடம் விடைபெற்றுப் புறப்பட்டாள். மாமியார்களுக்கு இயல்பாக உள்ள இறக்குமதிப் பொருள்கள், பண்டங்கள், பக்ஷணங்கள், தட்டு முட்டுச் சாமான்கள்—பலவுடன், பேட்டைக்குத் தன் பேரனையும் மகளையும் அழைத்துக்கொண்டு புறப்பட்டாள் வெள்ளையம்மா.

கண்ணம்மா உடுத்திய சேலையுடன புறப்பட்டு வந்தவள் ஒரு வாரத்திற்குப்பின் பட்டாடை உடுத்தி, இன்னும் மூட்டை முடிச்சுகளுடன் வந்து தன் வீட்டில் இறங்கினாள்.

அது அவள் வீடா? சந்தனக் கோனார் வீடா?

வண்டி சத்தம் கேட்டதும், சந்தனம் இரையின் மோப்பமறிந்து உடலைச் சிலிப்பிக்கொண்டு கிளம்பும் சிங்கம் போல ஆக்ரோஷத்தோடு எழுந்தார்.

வண்டிக்காரன் மூட்டை முடிச்சுகளோடு, தட்டுக் தடுமாறி "ஐயா இதை எங்கே இறக்க?" என்றான்.

"நடுத்தெருவிலே கொண்டு போய்யா!" என்று கத்தினார்.

வண்டிக்காரன் அனுபவசாலி; அநேக குடும்பங்கள சண்டை சச்சரவு; சாமான்கள், ஏற்றியும் இறக்கியும் செய்து மனுஷகுணங்களை இடைபோட்டவன்.

"அது என்னமோ, அம்மா சொல்லுச்சு; உள்ள கொண்டுவந்து வைக்கச் சொல்லி!" என்று அவர் பேச்சை கவனிக்காமலே திண்ணையில் வைத்தான்.

தமது பலத்தையெல்லாம் சேர்த்து, அந்தப் பொட்டலத்தைத் தலைக்குமேல் தூக்கி வாசல் பக்கமாக எறிந்தார். அதற்குள்ளாக இருந்த வற்றல், வடகங்கள் ஊறுகாய் என்னென்னவோ, சிதறிச் சின்னாபின்னமாக ஓடின. முற்றமெங்கும் சாமான்கள் சிதறின; சிந்தின; சீரழிந்து கிடந்தன.

முற்றத்தில் பொத்தென விழுந்த சப்தத்தைக் கேட்டு, வண்டிக்காரன் திடுக்கிட்டான். தெருவுக்குப்போய

"உள்ளே நீங்க போங்க அம்மா; நான் தூக்கி வர்றேன்," என்றான். தெருவாசல் நடைக்கதவு வழியாகப் பார்த்தாள் கண்ணம்மா; அத்தனை சாமான்களும் முற்றத்தில் இறைந்து கிடந்தன.

"வண்டிக்காரரே, சமான்களை இப்படித் தெருத் திண்ணையிலே இறக்கும்," என்றாள்.

சாமான்களை ஒவ்வொன்றையும் இறக்கிவிட்டு, வாடகையைப் பெற்றுக்கொண்டவன், ஓடியேவிட்டான்.

"அம்மா நீ இங்கேயே இரு. நான் வீட்டுக்குள்ளே போகிறேன்."

கண்ணம்மா, சிறுபெண்ணைப்போலச் சீவிச் சிங்காரித்து, பச்சைப்பட்டாடை அணிந்திருந்தாள். இடுப்பிலே அவள் மகன், மணிக்கட்டி. முற்றத்தில் சிதறிக் கிடந்த சாமான்களை மிதித்துக்கொண்டு வீட்டுக்குள் வந்தாள்.

வெளித்திண்ணையில் சந்தனக்கோனார் ருத்திர மூர்த்தி போல அமர்ந்திருந்தார். ஏறிச்செல்லும் நடைமீது அவர் கால் நீட்டி இருந்ததால், "காலை எடுங்கள்" என்றாள். அவர் கண்கள் சிவக்க, உதடு துடிக்க, வெறித்துப் பார்த்தார். தகப்பன் கோபத்தையும் லட்சியம் செய்யாமல், "அப்பா" என்று பிள்ளை தாவினான்.

"போடா தேவடியா மகனே!"

பையனுக்கு அர்த்தம் புரிந்து விடுமா? "நீதான் தேவடியா மவன்!" என்று கொஞ்சும் மழலையில் சொல்லிச் சிரித்தான்.

இந்தச் சம்பாஷணையைக் கேட்டும் கேளாதவள் போல வலக்கையால் அவர் காலைப்பிடித்து நகர்த்திவிட்டுப் படியேறினாள்.

"காலைத்தொட்டே, கையை முறித்துப் போடுவேன்."

அவர் படியேறிப்போக முடியாமல் கால் நீட்டியிருக்கவே, பையனைக் கீழேவிட்டுத் திண்ணையில் ஏறி உள்ளே நுழைய முயன்ற சமயம், திண்ணையிலிருந்து கீழே தள்ளினார், தடாலென்று கண்ணம்மா முற்றத்தில் விழுந்ததும், பையன், "அம்மா ஆ...ஆ..." என ராகம் இழுக்கவே, "என்னலே அம்மா" என்று அவன் கன்னத்திலே ஓங்கி அறைந்தார்.

பையன் துடித்துவிட்டான். மகள் முற்றத்தில் தள்ளப்பட்டது; பேரன் செவிட்டில் அறையப்பட்டது, இரண்டையும் தெருவாசல் கதவு வழியாகக் கவனித்த பெரியம்மாவுக்கு இருப்புக்கொள்ளவில்லை. அவள் உள்ளே வந்தாள்.

"என்னத்தைக் கண்டைய்யா இப்படி நிர்மூலம் செய்யறே?" என்று கத்தினாள். தகப்பனாருக்குப் பயந்து குழந்தை பாட்டியின் முழங்காலைப்போய்க் கட்டிக்கொண்டு, "இரு இரு உன்னை பெரிய கம்பாலே வெளுக்கிறேன்" என்று அழுகையோடு வலிப்புக் காட்டிற்று. கீழே விழுந்த கண்ணம்மா எழுந்து, "எதுக்காகத் தள்ளினீங்க?" என்றாள். அவள் குரலில் ஆங்காரமோ அவசரமோ இல்லை. ரொம்ப ரொம்ப நிதானம்.

"சொல்லணுமோ! திருட்டு நாயே போ வெளியே"

"எதைத் திருடினேன்?"

"மானம் போன கழுதை"

"போதும் போதும்"

"பேசாதே!" அவர் குரல் உயர்ந்தது.

"இது என் வீடு!'

"இது ....இது......" என்று வலிப்புக் காட்டுகிறவர். போல எழுந்து அருகாக வந்தார். கை ஓங்கி நின்றது. "போ; போய்விடு. இனி இந்த வீட்டில் வேலையில்லை" என்று கத்தினார்.

"எதுக்காக?" என்றாள்.

"சொல்லணுமா? திருட்டு நாயே. உன் பூர்வோத்திரம் தெரியாதா?"

பெற்றவளுக்கு நெஞ்சு வெடித்தது. "என்னய்யா பூர்வோத்திரம் கண்டுவிட்டே?" என்றாள் தொலைவில் நின்ற வெள்ளையம்மா.

"அம்மா நீ சும்மா இரு." என்று தாயைத் தன் பின்னால் தள்ளிவிட்டு, "இது என் வீடு; நான் வருவேன்" என்று முன்னால் போனாள்.

அருகாக கழுநீர்த்தொட்டி கலக்கும் மூங்கில் கம்பு ஒன்று கிடந்தது. அதை ஓடிப்போய் எடுத்தார் சந்தனம்

"அடேயப்பாடி!" என்று அலக்ஷியமாக நடை ஏறினாள். மூங்கில் தடியை குறுக்கே பிடித்து கழுத்து நேராகக் கொடுத்து இரு கையாலும் பின்னே தள்ளினார். நெறிவது போல உணர்ந்தாள்.

"கொன்று போடாதய்யா" என்றாள் பெற்ற தாய்.

"கொல்லட்டும் அம்மா. இவர் கையாலே செத்தால் அதுவே மோக்ஷம்."

"வேஷக்கார நாய். உங்கள் வண்டவாளங்கள் தெரியாதா? கிருஷ்ணன் உன்னை உங்கள் ஊரில் சந்தித்தவன்

அவனைக் கட்டிக்கொள்ள இருந்தாய்; இருவரும் என்னை மோசம் செய்துவிட்டீர்கள்."

"வேண்டாம் வேண்டாம், அப்படிச் சொல்லாதீர்கள்; நான் ஒரு பாவமும் அறியாதவள்.

"நீலிக்குக் கண்ணீர் நெற்றியிலே. என்ன நெஞ்சழுத்தத்தோடு ஓடிப்போனாய். நான் எல்லா விபரமும் அறிந்தேன். கிருஷ்ணன் சித்தியிடமே போய் விபரங்கள் விசாரித்தேன். போய் விடு, அவனோடு போய் வாழ்ந்து கொள்.'

"அநியாயம். அநியாயமாக என் மகளைக் குற்றம் சொல்லாதீர்கள்."

"பெரிய பத்தினி மாதிரி அழுகை" என்று மூங்கில் தடியால் விலாவில் குத்தினார்.

"கண்ணம்மாவின் அழுகை வடிந்து கண்ணில் வெறி ஏற்பட்டது. உடம்பிலே, ஒரு திருகல் முறுகல் மேனிச் சிலிர்ப்பு. அவள் பெண்மையின் சாந்தம் மாறி, ஒருவித பயங்கரமிருகம்போல வெறித்துப் பார்த்தாள்.

"நான் குற்றஞ் செய்யாதவள். உன்னிடம் யாரும் தவருக:சொல்லியிருப்பார்கள்."

"அப்படிப் பத்தினியா இருந்தா சொல்லாம இராவிலே ஆளோட மூணு மணிக்கு ஓடுவாயா?" என்று பரிகாசமாகச் சிரித்தார்.

"நானும் அவரும் ஓடவில்லை, உள்ளத்தை சொல்லுகிறேன். உங்கள் சிநேகிதனை நான் மணப்பதாக வாக்களித்தேன்; மணக்க முடியவில்லை. அவர் என்னை வஞ்சம் தீர்ப்பதாகச் சொன்னார்; நான் பயந்து ஓடிவிட்டேன்.

அவர் இங்கிருந்து போனபிறகு வரவே எண்ணினேன். வந்தேன்; நம்புங்கள்."

"இன்னும் என்னென்ன ஜோடனைகள் ஒருவாரமாக யோசித்தாய்?"

"நம்ப மாட்டீர்கள்?"

"உங்கள் கபட நாடகத்தை நான் அறியவில்லை; நம்பினேன்; நாலு நாளாக என்ன நடந்ததோ, நான் வாழ்ந்தது போதும்; இனி இங்கே இடமில்லை. போய்விடு" என்று மூங்கில் தடியால் கூட்டத்தைப் போலீஸ்காரன் தள்ளுகிறமாதிரி அவளைத் தெருவை நோக்கித் தள்ளினார்.

அவ்வளவு பயம் எங்கிருந்ததோ, அவள் கம்பை எதிர்த்துத் தள்ளவே, எதிர்பாராத தாக்குதல் கண்டு, அவர் நிலை தடுமாறி விழுந்தார். தகப்பன் விழுந்ததில் பையனுக்கு குஷி. பாட்டி இடுப்பில் இருந்த பையன் சிரித்தான். "அப்பித்தான் ஒணும்" என்றான். விழுந்தது தள்ளிவிட்டாள் என்ற ரோஷம், பையன் சிரித்தது எல்லாம் சேர்ந்து அவர் உடம்பிலே வெறியைஉண்டாக்கி, மூங்கிலை நேராகப் பிடித்து தலைக்குமேல் ஓங்கினார். அந்த அடிமட்டும் விழுந்திருந்தால், அவள் பிணமாகி விழுந்திருப்பாள். எதிர்ப்பாராத விதமாக, கிருஷ்ணன் வந்து மயிரிழை இருக்கும்போது கையையெட்டிப் பிடித்தார்.

தன் கோபத்தைத் தடை செய்ததால் இன்னும் கோபம், அதிலும் கிருஷ்ணனைக் கண்டதும் அவருடைய ரத்த ஓட்டம் தெளிந்தது.

"ஏண்டா! அயோக்கியப் பயலே'

"சீ, வாயை மூடு. மறுபடியும் சொன்னே, பல்லை உதிர்த்துவிடுவேன்."

"எல்லாம் தெரியும்?"

"கோபம், பாவம். சந்தனம் நீ ஒரு சமயம் என் உயிரைப் புலிவாயிலே இருந்து காப்பாற்றியவன்; நாம் சிநேகிதர்கள். வாய்வந்தபடி திட்டாதே; மரியாதையாக பேசு; மனுஷத்தனமான பேசு.........

"அதனுல்தான் இரவுக்கு இரவே என் மனைவியை இழுத்து........."

"உன் நாக்கு அழுகிவிடும்" என்று வெள்ளையம்மா கூச்சலிட்டாள்.

"சீ மடையன். கண்ணம்மா உன் மனைவியாக இல்லாத போனுல், அவள் இதுவரை உயிரோடு இருந்திருக்க முடியாது. ஒன்று தற்கொலை செய்துகொண்டிருப்பாள்; அல்லது என்னுேடு வாழ வந்திருப்பாள். அவள் உன் மனைவி; என் நண்பன் மனைவி யென்பதனுல் நான், கோழைபோல இரவிலே போய்விட்டேன்."

"விடு கம்பை."

"மூங்கில் தடியைக் கொண்டு அவளை அடிக்கப்போன உன் புத்தியை மெச்சுகிறேன். நான் சொல்லுகிறேன்; அவள் தெய்வப்பிறவி."

"பேஷ் பேஷ். நீதானப்பா சர்டிபிகேட் கொடுக்க வேண்டும். குளத்திலே நீந்தி விளையாடியவன், அவளுக்காக அவள் தாயிடம் 'நல்லவள்' என்று பட்டம் சூட்டியவன்!"

"உண்மை. அவள் இன்னும் உன் மனைவிதான்."

"எம்பிளே ஒருபாவமும் அறியாதது; அவமேலே அபாண்டமாகச் சொல்லாதீங்க, மருமகப்புள்ளே" என்ருள் தாய்.

"போம்மா போ. என்னை இன்னும் இளிச்சவாயன் என்று எண்ணாதே. 'ஒன்ருகப் பேசிக்கொண்டு வந்து மறு படியும் கபட நாடகம் போடுகிறீர்கள்."

"சே! என்னடா புத்தி. நான் இங்கிருந்து ஓடிப்போக நினைத்த அதேசமயம் அவளும், மாமன் வீடு போகப் புறப்பட்டாள், நானோ அவளைச் சந்தித்து வீட்டுக்குப்போ வெனச் சொன்னேன். அவள் கேட்கவில்லை; மாமன் வீட்டுக்கு ஓடிவிட்டாள்."

"ஓகோ. அப்பாலே நீ சொன்னபடியே இப்போ வந்து விட்டாள்." என்று பரிகாசப் பார்வையுடன் பார்த்தான்.

"என் வார்த்தையில் உனக்கு நம்பிக்கையில்லை?"

"அவசியம் இருக்க வேண்டும். போடா அயோக்கியப் பதரே! உன் வேஷத்தைக் கண்டு ஏமாந்தேன்; உன் திருட்டுத்தனத்திற்கு உடந்தையாக அவள்......"

கண்ணம்மாவின் உடம்பிலே, பழைய ரத்தம், கலியாணத்திற்கு முன் கன்னி வயதிலே அடாபுடியாக, யாரையும் தூக்கி யெறிந்து பேசும் குணமுள்ள ரத்தம் குமிழிட்டது. அவள் பழைய கண்ணம்மாவாகி விட்டாள். இடைக் காலத்திலே வந்து சேர்ந்த பணிவு, அடக்கம், சாந்தம் தெளிந்து ஓடின. அவள் நிமிர்ந்து நின்ருள். தான் ஒரு 'வீரப்பெண்' என்ற எண்ணம்போலும்!

"என்னைப்பற்றி என்ன சொல்லுகிருய்? நான் உன் மனைவி."

"இல்லை; எனக்கு வஞ்சனை புரிந்துவிட்ட கள்ளி."

"இல்லை சத்தியமாக; உன் பிள்ளைமீது ஆணை.' குழந்தை மாணிக்கம் தலையில், மூன்று முறை அடித்துப் பேசினள். அவள் பேச்சில் மன்னிப்பைவிட அதிகாரம் தொனித்தது; வேண்டுகோளைவிடக் கட்டளையின் சாயைப் படர்ந்தது.

"நான் உன் மனைவி"

"இந்த வீட்டில் உனக்கு வேலையில்லை. எவளையும் இழுத்து.........." அடுத்த விநாடி சந்தனக் கோனார் கன்னத்தில் 'பளீர்' என்று இறுக்குவிட்டாள் கண்ணம்மா.

"இப்போது என்ன சொல்லுகிறாய்?" என்று கர்ஜனை செய்தாள் நிமிர்ந்த பார்வையோடு.

சந்தனக்கோனார் அடிப்பட்ட ரோஷத்தில் மூங்கில் தடியைப் பிடுங்கி அடிக்க முயன்றும் கிருஷ்ணன் விடவில்லை. ஆனல், "சீ! நீயும் ஒரு பொம்பளையா, அடிக்கிறயே கை நீட்டி!" என்று காறித்துப்பினர்.

"கட்டிய பெண்சாதியைப் பார்த்து சொல்லுகிற சொல்லா? நான் என்ன மனுஷியா மாடா? இல்லாததும் பொல்லாததுமாக."

"என் வீட்டை விட்டு நட. இனி இங்கு வேலையில்லை."

"அட எம்புலியே. நீயும் உன் வீடும்" என்று பரிகாசமாகச் சிரித்தாள் கண்ணம்மா, பைத்தியம் போல.

கிருஷ்ணன், "டேய் சந்தனம் பழியும் பாவமும் வேண்டாம். நான் இனி தலைக்காட்டமாட்டேன்; ஏற்றுக் கொள்." என்று கெஞ்சினர்.

"கெடுத்ததும் போதாதென்று என் தலையில் கட்டவும் பார்க்கிறயா? போ" என்று எதிர்பாராதவிதமாக மூங்கி

லைப் பிடுங்கி கிருஷ்ணன் தலையில் அடித்துவிட்டார். தலையில் பட்டு, ரத்தம் பீறிட்டுப் பாய்ந்தது.

ரத்தம் பாயவே, கண்ணம்மாவின் தாய் நடுநடுங்கிப் போனாள். மகளுக்கும் அப்படி ரத்தக் கோரை ஏற்படுமுன் கழுவ நினைத்து, "வாட்டி......போவோம். இந்த நாசமாய்ப் போனவன் வீட்டில் வாழரதைவிட பிச்சை எடுக்கலாம்." எனக் கையை பிடித்து இழுத்தாள். கண்ணம்மா அசைய வில்லை. தாயின் பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டு "கடைசிமுறையாகக் கேட்கிறேன். சொல்லுங்கள். பெண் பாவம்பொல்லாதது." என்று சந்தனக் கோனைக் கைப் பற்றினாள்.

"சீ மூதேவி! போறயா? உன் மண்டையையும் பிளக்கணுமா?" என்று உதறித் தள்ளவே கண்ணம்மா பின்னால் போய் விழுந்தாள். அவளுக்கு ஆத்திரம், கோபம்.........

"அட நீயும்மனுஷனா? சொல்லறதை நம்பாத ஜன்மம்" காறித்துப்பினான்.

எதிரே சுவரில் சாய்ந்தபடி ரத்தம் ஒழுக ஒழுகக் கிருஷ்ணன் நின்று கொண்டிருந்தார். அந்த ரத்தத்தின் நிறம் அவளுக்குத் தெம்பைக் கொடுத்தது.

"வா, போகலாம்" என்று கிருஷ்ணன் கையைப் பிடித்தாள்.

"சீ விடு" என்று கையை உதறினான்.

"நீயாக என்னை இருமுறை விரும்பினாய்; நான் கையை உதறிவிட்டேன். இந்தமாதிரி மிருகத்திடம், நன்றியும் விசுவாசமும் சேர்ந்த நான் இருப்பதைவிட உன்போன்றவனிடம் இருக்கலாம்." அவள் மீண்டும் கிருஷ்ணன்

கையைப் பிடிக்க வந்தாள். அவர் தலையிலிருந்து வடிந்த ரத்தம் அவள் உள்ளங்கையில் அப்பிக் கொண்டது.

கிருஷ்ணன் பின் வாங்கியவர், "கண்ணம்மா, நீவேறு யார் தொட்டவளாக இருந்தாலும் என் மனம் உன்னைச் சூறையாடும்; உன் வார்த்தைகளை நம்பி நான் ஏமாந்தவன்; ஆனால் நீ என் நண்பன் கைப்பட்டவள்; இந்த ஜன்மத்தில் உன்னை விரும்புவது மகாபாவம்" என்று சொன்னார்.

வீட்டுக்குள் ஓடிப்போய் பணப்பையோடு வந்த சந்தனம் படபடப்பாக "இந்தா உன் பணத்தை எடுத்துக் கொண்டு தொலை!" என்று வீசினார்.

அவள் "எனக்கு உலகம் சுடுகாடாகத் தோன்றுகிற நிலையில்தான், நடைப்பிணமாக இருக்கும் உன்னோடு வாவது. உன் பால்யமனோரதத்தையாவது நிறைவேற்றும் கடமையுணர்ச்சியில் வாழ நினைத்தேன்" என்று சொன்னாள்.

"அது வேண்டாம். இவன் புத்தி திரும்பும்; என்றாவது மனிதனாக மாறுவான்; வாழ முடிந்தால் வாழ்ந்து விடு; நான் குறுக்கிடவில்லை." பணத்தை எடுக்காமலே நடந்தான்.

கிருஷ்ணன் திரும்பிப் பார்க்காமல், சொட்டுச் சொட்டாக ரத்தம் வடியே, வலக்கையால் நெற்றியை அழுத்திக் கொண்டு நகர்ந்தார். இரத்தத்துளிகள் அவரைத் துரத்திக்கொண்டே போயின. வெள்ளையம்மாள் பணப்பையை எடுத்துக்கொண்டு அவசர அவசரமாக செருகிக் கொண்டாள்.

"ஏம்மா நிற்கிறே வாவா. நான் வாழ்ந்ததும் போதும்; ரெண்டு பயல்களும் கோழைகள்! வா; உலகத்திலே ஆண்

துணையில்லாமல் வாழ முடியாதா ? வா, ஊரைப் பார்த்து போவோம்......" என்று ராணிபோல நடந்தாள் கண்ணம்மா.

தாயார்க்காரி பேரனை இடுப்பில் எடுத்துக் கொண்டு, "ஐயோ இன்னும் உங்க மனம் இறங்க வில்லையா? எம்மக" என்று,

"இந்தம்மா, புருஷன் இல்லையின்னு எனக்குத் தீர்ந்து போச்சு; தாயும் இல்லையின்னு போகணுமாணு. நீ பேசிக் கொண்டிரு. டேய் பயலே" என்று குரல் கொடுத்ததும் மாணிக்கப்பயல் தாயின் இடிப்பிலிருந்து உதறிக்கீழே குதித்து அவளிடம் வந்து தொற்றிக் கொண்டான்.

தாயையும் லட்சியம் செய்யாமல் குழந்தையுடன் நடக்க ஆரம்பித்தாள்.

"கண்ணம்மா" என்றார் சந்தனக்கோனார்.

"அவள் செத்துச் சாம்பலாகியாச்சு" என்று சொல்லி மேலே நடந்தாள்.

சந்தனக்கோனார் வந்து மறித்தும், அவள் ஈவு இறக்க மில்லாமல் தெருவாசலைத் தாண்டிச் சென்றாள். அவளு டைய தாயும் ஓடிக்கொண்டு வந்தாள்.

தெருவிலே ஈ மொய்த்து நின்ற ரத்தத்துளிகளை இடை இடையே பார்த்துவிட்டு நடந்தாள். தெருவின் முனையில் வேறு பாதையில் திரும்பி நடந்தபோது அங்கே ரத்தத்துளிகள் இல்லை. அவள் மேலும் மேலும் போய்க் கொண்டிருந்தாள். நடையில் சோர்வோ, தளர்ச்சியோ இல்லை. நிமிர்ந்து, நேர் நடையில் நடந்து போய்க்கொண் டிருந்தாள். இடுப்பிலே குழந்தை; பின்னால் தாய். இருவ ரும் துணையாகப் போனார்கள்.

கண்ணம்மாவின் உடம்பிலே பழைய ரத்த வாடை ஓடிக்கொண்டிருந்தது. அவள், இல்லறத்திலிருந்து விடு பட்ட கன்னித்தெய்வம்.




"மாயாவி" எழுதிய

கற்பனை அழகு மிளிரும்

**கதைகளின் தொகுதி**

*தமிழகத்தின் பிரபல*
*பத்திரிகைகள்*
*பாராட்டுகின்றன*

இத் தொகுதியில் மணி மணியான பத்துக் கதைகளை சுவாரஸ்யமும் உணர்ச்சிப் பெருக்குடனும் சொல்கிறார். இந்த அழகிய கதைகளை தமிழுக்கு அளித்த "மாயாவி"யைப் பாராட்டுகிறோம்.

—சுதேசமித்திரன்

குணச் சித்திரங்கள் 'அகதி'யில் உணர்வூட்டி நிற்கின்றன, உயிர்பெற்று நிற்கின்றன, ஆசிரியர் "மாயாவி"யின் பேனாவினால்!

—பொன்னி

"மாயாவி" சிறுகதை எழுதுவதில் நல்ல வெற்றி பெற்று இருக்கிறார் என்பதற்கு, பத்து சிறுகதைகள் கொண்ட இத்தொகுப்பே போதிய சான்றாகும்.

—ஈழகேசரி (இலங்கை)

பத்துக் கதைகள் அடங்கிய இத்தொகுதி, முதல் தரமான கதைகளின் ரசிகர்களுக்கு ஒரு நல்விருந்தாய் அமைந்துள்ளது.

—தினமணி

இக்கதைகளைப் படித்ததுமே நம்மனம் புதுப் பக்குவநிலையை அடைந்துவிடுகிறது. அதுதான் கதாசிரியன் எதிர்பார்க்கும் பயன்; அந்தப் பயனை "மாயாவி" இந்தக் கதைகளின் மூலம் பெற்றுவிடுகிறார். —நவ இந்தியா

விலை ரூபா இரண்டு.

---

# புதுமைப் பிரசுரம்

**பெண்ணாடம் * தெ. ஆ. ஜில்லா**